உ

ஸ்ரீ கணேசாயநம:

# ஸ்ரீ சிவமஹிம்ந ஸ்தோத்திர மூலம்

இது

ஸ்ரீமது நியாயசந்திர வேதாந்தபாஸ்கர

வீர. சுப்பைய ஞானதேசிகேந்திரரவர்களால்

இயற்றப்பட்டது.




இதற்கு

திருவண்ணாமலை ஈசானிய மடாலயம்

ஸ்ரீமது சி. சுப்பைய சுவாமிகளால்

## சுபோதினி என்னும் உரை

இயற்றப்பட்டு

சென்னை:

"ஆனந்தபோதினி" அச்சியந்திரசாலையில்

பதிக்கவும்பட்டது.

---

30-9-1921.

 [விலை அணா ௫.



ஸ்ரீ சிவபெருமான்.

ஸ்ரீ கணேசாயநம :

பரப்பிரஹ்மணேநம:

# ஸ்ரீ சிவமஹிம்ந ஸ்தோத்திர மூலமும் சுபோதினி என்னும் உரையும்.

## பாயிரம்.

கந்தர்வர்கட் கிறைவராகிய புஷ்பதந்தாசிரியர் ஒரு பூவுலக அரசனது நந்தனவனத்திலுள்ள புஷ்பங்களைக்கொய்து ஸ்ரீகைலாசத்தி லெழுந்தருளியிருக்கும் சாம்பமூர்த்தியை அருச்சித்து வருங்காலத்தில், தனது புஷ்பங்களைவிடுபவனைக் கண்டுபிடிக்க மந்திரிமாரோடு ஆலோசனைபுரிந்து ஸ்ரீ பரமசிவநிருமாலியத்தை நந்தனவனத்தின் உள்மார்க்கங்களில் தூவுமாறு ஆக்ஞைபுரிந்தனன். விடியற்காலத்தில் அதனையுணராதுதாண்டிக்கொண்டு மலர் கொய்த கந்தர்வவிறைவர் தமது ஆற்றல்குன்றவும் கீழேநோக்கி நிருமாலியங்கிடப்பதைக்கண்டு இதனாலன்றோ நமக்குப்பறக்கும் ஆற்றலின்றாய தென்றுணர்ந்து இது உமாதவன்றிருவருளாலன்றித் திராதெனஸ்ரீ மஹாதேவரது அனந்தகல்யாணகுணங்களைத் தொகுத்து முப்பத்திரண்டு சுலோகவடிவமாக சிவமஹிம்நஸ்தோத்திரமென்னு மிவ்வரியநூலினை யியற்றி கருணைக்கடலின் றிருவருளால் ஸ்ரீ கைலையையடைந்து சிவபெருமானைப்பூசித்தனர். அவர்தாமியற்றிய நூலின் சொற்பொருளமதியை நோக்கிச் சிறிது வியப்பை யடைய அதைக்கண்ணுற்றுத்திருநந்திதேவர் நகைத்தனர். அந்நகையாற்றிகழும் பற்களின்கண் முன்னமேயமைந்துள்ள இம்முப்பத்திரண்டு சுலோகங்களையுங்கண்டு வியப்பை விடுத்தனரென்றும், இத்துதி வெளிவரும்படி புரிந்தகாரணத்தால் சிவபெருமான் மனமகிழ்ந்து அவரது தந்தங்கள் புட்பமாமாறு அருளினமையின் அவருக்குப்

புஷ்பதந்தர் என்னுங் காரணப்பெயர் வாய்ந்ததென்றும் பெரியோர் கூறுகிற்பர். அத்வைத சித்தி யாதி நூற்கருத்தரும் சர்வக்ஞ சூடா மணியு மான ஸ்ரீ மதுசூதனசரஸ்வதிசுவாமிகளால் இந்நூற்கொரு அழகியவியாக்கியானஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதனாரம்பத் தில் பூர்வாசிரியர்கள் திருவாய்மலர்ந்தருளியதை சங்கிரகிப்பே னென பிரதிக்ஞைசெய்தமையால் பூர்வாசிரியர்களும் இதற்குப் பாஷிய மியற்றியிருக்கின்றனரென்று விளங்குகின்றது. அகோபலி யென்னுமரிய பெரிய வியாக்கியானமும், சுபோதினி யென்னுஞ் சிறியவியாக்கியானமும்,இன்னும்பல வியாக்கியானங்களும் இந்நூற் குள்ளன. இத்தகைய அருமைவாய்ந்த இந்நூல் தேவவாணியிலிருப் பதால் அவ்வும்பர்வாணியை யுணர்ந்தார்க்கேயன்றித் தமிழ் மக்கட் குப் பயன்படாமையைக்கருதி அன்னோருக்கும் பயன்படுமாறு திருக் களர் மடாதிபதி ஸ்ரீமத் வீரசேகர ஞானதேசிக பாதசேகர நியா யசந்திர வேதாந்தபாஸ்கர ஜகத்குருபீட மஹாமண்டலேசுவரராகிய ஸ்ரீமத் சுப்பைய ஞானதேசிகேந்திரரவர்களால் செந்தமிழில் செய் யுள்வடிவாய்த் திருவாய்மலர்ந் தருளப்பட்டது. இதுவும் கூரிய மதியுடையோர்க்கேயன்றி யேனையோர்க்குப் பயன்படவில்லை. அத னால் இது அனைவருக்கும் பயனாகும்பொருட்டும் இதன் பொருள் மிககெம்பீரமானதென்று தெரிவித்தற்பொருட்டும் இதற்கு ஸ்ரீமத் சிதம்பரஞான தேசிகரவர்களின் பாதசேகரரான திருவண்ணாமலை ஈசானியமடாலயம் ஸ்ரீமத் சி. சுப்பையசுவாமிகள் அவர்கள் சுபோ தினி யென்னும் வியாக்கியானத்தை இயற்றிச் சென்னை "ஆனந்த போதினி" அச்சியந்திரசாலையிற் பதிப்பித்து வெளியிட்டனர்.

30-9-1921. சு. பிர.

(அவதாரிகை) இந்நூலாசிரியர் தாம் செய்யப்புகுந்த நூல் இடையூறின்றி இனிதுமுடிதற்பொருட்டு ஆன்றோரொழுக்கத்தாலடையப்பட்ட இஷ்டதெய்வ நமஸ்காரவடிவ மங்கலத்தைக் கூறுகின்றார்.

பொன்னின் மாமலை வில்லியும் பொன்னினா யகனு
மன்னை யாதிய வனைவரு மனுதினம் பணியு
மென்னை யாட்கொளக் குருபர னெனவெழுந் தருளும்
வன்னி மாமுகன் மலரடி வாழ்கவென் மனத்தே. (1)

(இதன்பொருள்) தமது குருவடிவமாயெழுந்தருளிவந்து உபதேசித்த வன்னிவனமென்னும் க்ஷேத்திரத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ விநாயக்கடவுளை வணங்குகின்றாரென்பதாம். "பொன்னின்மாமலை வில்லி" என்றது சிவபெருமானை. "பொன்னினாயகன்" என்றது விஷ்ணுவை. "அன்னையாதி" என்றது பார்வதிமுதலியதேவதைகளை. இவர்களால் வணங்கப்பட்டவர் என்று ஸ்ரீ விநாயகருக்கு விசேஷணங்கூறினமையின் இவரது வுபாசனாமூர்த்தியாகிய விநாயகக்கடவுள் காரணப்பிரம்மமென்பதே பொருள். அன்றியும் திரிபுர சம்மாரத்தில் சிவபெருமானும் வாமனாவதாரத்தில் விஷ்ணுவும் மஹிஷாசுரமர்த்தனத்தில் பார்வதியும் பூமியைத்தாங்குதலில் ஆதிசேஷனும் விநாயகக்கடவுளை அருச்சித்தனர் என்ற சரிதமும் ஈண்டு காணக்கிடக்கின்றது எனப்பொருள்.

(அ-கை) தாமெடுத்துக்கொண்ட நூலின் முதநூற்கருத்தரை வியந்து துதிக்கின்றார்.

கட்பு லன்களுங் கருத்ததுங் கருதுதற் கரிய
நிட்க ளங்கநன் னிட்டையின் னிகழ்தரு நிமல
நுட்ப நுங்கிடு நுண்ணிய நுணுக்கினை நுவலும்
புட்ப தந்தரின் பொற்பதம் புந்தியிற் பொலியும். (2)

(இ-ள்) "நுட்பநுங்கிடும்" என்றதால் அதி சூக்ஷ்மமான வஸ்துக்களையும் விளக்குவது என்பதாம். "நுண்ணியநுணுக்கு" என்றதால் சூக்ஷ்மத்தினு மதிசூக்ஷ்மமான பரமான்மா வென்ப

தாம். ஆகவே மனவாக்குகளுக்கு வெட்டாததாயும் நிருவிகற்ப சமாதியில் விளங்குவதாயுமுள்ள பரமான்மாவைப் போதிக்கும் புஷ்பதந்தரை வணங்குகின்றேனென்பது பொருள்.

(அ-கை) தமது குரு, பரகுரு, பரமகுரு இவர்களை வணங்குகின்றார்.

சீருலா முத்தி ராமலிங் கேச தேசிகன் றிருவடி மலரைக், காரெண மெனுங் கருணைநன் னிதியக் கடவுடண் கமலநற் கழலை, வீரமா முகத்தை யொழித் தரு ளுருக் கொள் வீரஞா னேசதே சிகன்றன், பூரணானந்தந் தரும் பொலன் கழலைப் புகழ்ந்துள நினைந்து போற் றுதுமே. (3)

(இ-ள்) "மாமுகத்தை யொழித்து அருளுருக்கொள்வீர ஞானேசதேசிகன்" என்றது தமது இஷ்டதெய்வமாகிய விநாயகக் கடவுளே திருவுருக்கரந்து சத்குருவா யெழுந்தருளிவந்தனர் என்பதாம்.

(அ-கை) இன்னூலாசிரியர் இத்துதி யேனையோர் துதி போன்று இயற்றப்படாமையின் இறைவாருளை யெளிதிற் கிட்டுமாறு செய்யத்தக்க தாமாதலின் இதில் அனைவரும் ஒரு தலையாய் அன்புமிக்குடையராதல் வேண்டுமென்பதை அறிவுறுத்தற் பொருட்டு ஆன்றோர் வழக்கத்தாலறியப்பட்ட இன்னூல் வரலாற்றை மூன்று யாப்பினால்யாத்துக் கூறுகின்றார்.

கந்தருவர்க் கிறைபுட்ப தந்தனெனுந் தவத்தோன் காவலனிங் கொருவனுடைப் பிரமதா வனத்தே, சந்ததமு மலர்பறித்துக் கயிலையின்க ணுறைவிருஞ் சம்புவிற்கன் பொடுபூசை யியற்றிவரு நாளி, லெந்த நறுங் குசுமமதை யெடுத்திடுநற் றவனை யிறைவனிரு மாலியங்கொண் டருந் தவத்தைத் தவிர்த்தே, யெந்தவிதத் தினுங்காண்ப லெனவுலவும் வழிக்க ணிறைவனிரு மாலியத்தை யினிதுதெளித் தனனால். (4)

அந்தநெறி யறிந்திலனு யமரர்நதி படிந்தே
யலரிவரு முனங்குசும வனமடைந்து பறித்தே
வந்தவழி யேகநினை தரலுமவ னுற்றல்
வன்னிவனம் புகுந்தவரா வரணமே புரைய
நந்திடலுங் கண்டுபர சிவநிருமா லியத்தா
னமக்கடைந்த தவனருளா லொருவுமென நினைந்தே
சந்திரசே கரமவுலி மகிமையெலாந் தொகுத்துத்
தருந்தசிவ மகிமனெனச் சாற்றவரு ளினனுல். (5)

அரனெனுங் கருணை வாரி யருள்செயக் கயிலை சார்ந்து
விரிதுதி செய்தே மென்று வியப்பினை யடைத லோடுந்
திருநகை புரிய நந்தி முறுவலிற் றிகழ நோக்கிக்
கருவம தொழிந்தா ரென்றுங் கழறுவர் கற்றமேலோர்.(6)

(அ-கை) அவையடக்கங் கூறுகின்றார்.

கயிலையிற் புகழ் மிந்தக் கந்தர்வ விறைவன் கீதந்
துயர்வடி வடிய னேனுந் துணிதல்செந் தமிழிலாற்ற
மயிலிறை தருவேல் சூரின் மார்புகீண் டிடவெங் கானிற்
பயிறரு வேலும் பேரின் பான்மையி னினைதன் மானும் (7)

(அ-கை) உரையாசிரியர் தமது இஷ்ட தெய்வத்தை ஸ்மரித்து சத்குருவை வணங்குகின்றார்.

பொன்னிலங்கு மிதழிமதி நதியாதி புனையும் புரிசடை யுனுதல் விழியு மழுமானும் போக்கி, வின்னிலங்கு வலய மதி நரவுருவ மெடுத்தே மெய்மையறி யாதிறந்து பிறந்து ழன்றவினையேன் தன்னிலங்கு மெய்ப்பொருளைக் காட்டிய சிற்சபை சேர் தனியூரின் மருவுசிதம் பரஞான குருவின், மன்னிலங்கு மருளாலே சிவமஹிமா துதிக்கு மயக்கமறச் சுபோதினி யென்மானுரை செய்குவனே. (8)

(அ-கை) உரையாசிரியர் இந்நூலாசிரியரைவணங்குகின்றூர்.

சீரிலங்கும் புட்பதந்தா சாரியரென் பவராற் றெய்வ வாணியிலேசெய் சிவமகிமா துதியைப் பாரிலங்குந் தமிழ் நாட்டுப் பாவலரு முணரப் பாணினியோ வடமொழியிற் குறுமுனியோ தமிழில், நாரிலங்குஞ் சனகனோ ஞானமதிற் சுகனோ நவிலும்வை ராக்கியத்தி லெனப்பெரியோர் நவிலப், பேரிலங்குஞ் சுப்பைய தேசிகன்றென் மொழியிற் பிறப் பித்தா னவனடியைப் பேணியுள் வைக் குதுமே. (9)

---

பதிகமொன் றென்றும் பரமன தாடற் பாட்டினை யுணர்த்தியந் தூய, கதியளி சிவமா மகிமை யென்று தியைக் கழறினன் வடமொழி யதனில், நிதிமிகு புட்ப தந்தனென் னிறைவ னேர்வுறத் தமிழ்மொழி யதனில், மதிகதி யொழிந்த மகத்திடை நிலைத்த மனத்தனு யகந்தையை யறுத்த (10)

ஆசகலடியர்க் கருள்பெரு மனையா யரும்பவப் பிணி யகற்ற முதாய், மாசறு வீர மணியினின் றெழுந்த மாபெரு மொளியதாய் வயங்கு, தேசலை வீர சுப்பைய ஞான தேசி கன் றிருக்க ருணையினல் பேசுநற்ற மிழ்நாடிய மொழி பெயர்த்துப் பீடுறக் கொடுத்தன னதற்கு (11)

சீருறும் புலியூர்ச் சிதம்பர ஞான தேசிகன் றிருவரு ளதனற், காரறக் காய மூன்றினு மதியைக் கழற்றிநல் லருணை யீசான, வேருறு மடத்தி லிலகுசுப்பைய விறைவனற் சுபோதினி யெனவே, பேருறும் பெரிய வுரையினை விரித் துப் பேறுற வெளிதினிற் றெரித்தான். (12)

இங்ஙனம்,

சு. பிரகாசாநந்தன்.

பாயிரம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# ஸ்ரீ சிவமஹிம்ந ஸ்தோத்திரம் *

## மூலமும்

# சுபோதினி என்னும் உரையும்.

## நூல்.

ஈண்டு சகுணமாயும் நிர்க்குணமாயுமுள்ள சிவபெருமானுடைய குணாதிசயங்களைப் புகழ்தலே சிவமஹிம்ந ஸ்தோத்திரமென்பதாம்; அதாவது சிவபெருமானுடைய மகிமையைப் புகழ்தலாம்.

(அவதாரிகை) அற்றேல் அத்தன்மைய துதியாவது குணங்களையறியும் ஞானத்தின் வயமாயிருத்தலினால் அக்குணங்களையுணராதவர்களால் துதிக்கமுடியாது. ஆகவே சிவபெருமானுடைய குணங்களும் எல்லையற்றனவாகலின் அறியவியலாதன; அதனால் அக்குணங்களைப்புகழ்தலாகிய துதியானது பொருத்தமுடையதாதல் யாங்ஙனம்? பொருத்தமில்லாத துதியோ நகைத்தற்கேயேதுவாம் என்னுமாசங்கையை நீக்கும் வாயிலாய் அத்துதிசெய்ய தனக்கும் தகுதியில்லையென்ற தாழ்மையைத் தெரிவித்துக்கொண்டே சிவபெருமானைத் துதிக்கயத்தனிக்கின்றார்.

ஆதி நின்புக ழின்கரை கண்டிலா ராடு மந்துதி நிந்தித
மாகுமேல், வேத னண்டர்க ளாதிய ரொண்டுதி வீணதே
யெனி னுந்த முளந்தனுற், காத லுந்து மளவெவருந்துதி
கால கால புரிந்து சிறந்தொரே, லோது மின்றுதி நின்கண்
முயல்கையு மோரி லென்றன தொன்றிழி வின்றரோ. (1)

---

* சிவமகிமைத்தோத்திரம்.

(இதன் பொருள்) ஆதி - உலகமுதலானவரே! கால கால - யமனையும் அழித்தவரே! நின் - தேவரீரின், புகழின் - மஹிமையின், கரைகண்டிலார் - முடிவு இவ்வளவுதானென்று உணராதவர்களால், ஆடும் - செய்யப்படும், அம் துதி - அழகிய தோத்திரம், நிந்திதமாகுமேல் - பழிக்கப்படுமேல், (அப்பொழுது) வேதன் — பிரம்மாவினாலும், அண்டர்களாதியர் - தேவர் முதலியோர்களாலும், ஒண்டுதி - செய்யப்படு மழகிய தோத்திரம், வீணதே - பயனின்றியதேயாகும், எனினும் - என்றாலும், தம்காதல் உளந்தனால் - பத்தியோடுங்கூடிய தமது மனதினால், உந்துமளவும் (சிவபெருமானது குணங்களை) உணர்ந்தவரையிலுங் கொண்டு, துதிபுரிந்து-தோத்திரஞ்செய்து, சிறந்தொரேல்-மேன்மையுடையவரேயாகில், ஓரில் - இதனையாராயுமிடத்தில், ஓதும் - சொல்லாநின்ற, இன்றுதியின்கண் - இனிமையான இத்தோத்திரத்தில், என்றனது முயல்கையும்—என்னால் செய்யப்படும் முயற்சியும், ஒன்று இழிவு இன்று—எவ்வகைப்பழிப்பு மின்றியதாம் எ-று. அரோ ஈற்றசை.

(விசேஷவுரை) தேவரீர் மகிமை இவ்வளவுதானென்று அளவிட்டறியாத சர்வக்ஞமில்லாத யெம்மைப்போன்றவர்களாற் செய்யப்படுந்துதி பொருத்தமின்றியதாய் நகைப்பிற்கேதுவாயின் சர்வக்ஞரான பிரம்மா முதலியோரால் செய்யப்பட்ட தேவரீரது குணங்களைப் புகழ்தலான துதியும் நகைப்பிற்கே யேதுவாகும். குணங்கள் இவ்வளவுதானென்று இல்லாமையால் இவ்வளவுயென்று அவர்களாலும் அறியப்படாதன. ஆகையால் அந்த பிரம்மாமுதலியவர்களின் சர்வக்ஞத் தன்மைக்கு வியாகாததோஷம் (முன்னுக்குப்பின்முறன்) இன்று. அவர்களுக்குள்ள் சர்வக்ஞத் தன்மையானது உள்ளதைமாத்திரம் அறிவதாம். அங்ஙனங்கொள்ளாக்கால் அவர் மயக்கவுணர்வினரேயாவர். “எவ்வித்துவானிண்டு விஷ்ணுவின்சிறந்தகுணங்களை யெவ்விதத்தினுமறிவானேல் அவன் பூமியின் தூளிகளையு மறிவான்” என்று ஸ்ரீபாகவதத்திலும் குணங்களுக்கு முடிவின்மை கூறப்பட்டுள்ளது. “சூதரே! அவன் குணங்கள் எதனால் புழகப்படுகின்றனவோ அது வாக்கு கைகளோ அவன் கருமஞ்செய்வனவே அவனைத்தியானிப்பதே மனமும் மகத்

வடிவுடைய அவன் கதைகளைச் சொல்லாத நாக்குத் தவளைநாக்குப் போன்று (இருந்தும்) பயனின்றியதே" என்னும் ஸ்ரீ பாகவதத்தாலும் "பக்ஷிகள் விண்ணிற் பறப்பன தம்மளவாய்" என்னுநியாயத்தாலும் தமது காதலுள்ளத்தா லுணரப்பட்ட குணங்களால் வாக்கின் பயனுக்காக துதிசெய்கின்றவர்களனைவரும் மேன்மையுடையவர்களேயாகில் என்மனதின் பக்தியனுசாரமாய் விளங்கிய குணங்களால் இத்துதியின்கண் செய்யப்படும் எனது முயற்சியும் பழிப்பின்றியதேயாகும். முற்பாதியால் துதிக்கமுடியாதென்று கூறும் வாயிலால் ஒருவரானு மறியவியலாத மகிமைவடிவாய பெரிய தோத்திரஞ் செய்யப்பட்டது. பிற்பாதியால் துதி சமமெனக் கூறும் வாயிலால் எவர்துதியும் பொருத்தமுடையதெனப்பட்டது. இதனு லிவர் சாமர்த்தியம் அதிகமென விளங்குகின்றது எ-று.

(அ-கை) முற்கூறியபடி துதிவிஷயத்தில் பிரம்மாமுதலியவரோடு தான் சமானமென்று மீண்டுங்கூறுபவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கப்படுந் தன்மையினரன்றென்றே துதிக்கின்றார்.

மதியினொடு மொழியின்வழி யொழியுமுன துயர் மகிமை மறையுமெனை மிகுபய மொடே, யதுவலதை விடும் வகையி லறையுமது துதிபுரிய வருகமெவ ரருகமெனிலோ விதமெவள வுகுணமுள விடயமெத னதுவெனினும் விமலை யொடு மருள் யுரியவே, பொதுவில் வரு நவவடிவி லெவர் கண்மன மெவர்கண்மொழி புகழலொடு புகலிலதரோ. (2)

(இ-ள்) உனது உயர்மகிமை-தேவரீரது (சகுண நிர்க்குண வடிவங்களான) மேன்மையான மகிமையானது, மதியினொடு மொழியின்வழி ஒழியும் - மனமும் வாக்கும் செல்லுகின்றவழிக்கு அப்பாற்பட்டது, (அ-கை) வாக்கிற்கு எட்டாததேல் அதனைக் கூறுஞ் சுருதி அப்ரமாணமாகாதோ வெனிற் கூறுகின்றார், மறையும் - வேதமும், மிகுபயமொடே - அதிக அச்சத்தோடு, அது வலதை விடும்வகையில் - (அதற்கன்னியமானதை நீக்குதலான) அதத்து வியாவிருத்தி வாயிலாக, அறையும் - (குறிப்பாக) கூறுகின்றது, (ஆகையால்) அது துதிபுரிய எவர் அருகம் - அதைத்

துதி செய்யத்தக்கவர் யாவர் (இல்லையென்றபடி) அருகம் இல் என் - தகுதியின் றென்றது என்னேயோ வெனின், எவளவுவித குணமுள - (சகுணவடிவம்) பலவிதமான குணமுடையது, விடையம் எதனது - (நிர்க்குணவடிவம்) ஒரு பிரமாணத்திற்கும் விஷய மாகாதது, (அ - கை.) அங்ஙமாயின் தமது மனதிற்கு விளங்கிய குணங்களைக்கொண்டு யாவருந் துதிக்கலாம் என்ற முற்கூற்றிற்கு முறணுமேயெனின் கூறுகின்ருர். விமலையொடு - (இயல்பாகவே) கன்மமலாதிகளின்றிய பார்வதியோடு, அருள்புரிய - அன்பர்கட்கனுக்கிரகிக்க, பொதுவில்வரும் - வெளியிலெழுந்தருளும், நவவடிவில் - (மாமையாற் கற்பித்துக்கொண்ட திவ்வியமங்கள மூர்த்தத்தில், எவர்கண் மனம் — யாவரது மனமும், எவர்கண் மொழி - யாவருடைய வாக்கும், புகலொடு - செல்லுதலும், புகழல் இலது - துதித்தலையுஞ் செய்யமாட்டாது (மற்ருே அனைவரது மனவாக்குகளுஞ் செல்லுகின்றன வென்பதாம், எ - று.

(வி-ரை) குணங்களுக்கு முடிவின்மையினுல் சிவபெருமானுடைய சகுணவடிவமும், நாமரூபாதிகளான யாதொருதருமமு மின்மையினுல் நிர்க்குண வடிவமும் மனவாக்குகளா லறியப்படாதன. “ வாக்கு மனதோடு சென்றடையாமல் எதினின்றும் மீளுகின்றதோ” என்று சுறுதிகூறுவதுங்காண்க. சகுணத்தைக்கூறும்போது பொருத்தமின்மை யற்பமாயினும் எங்ஙனமுண்டாய்விடுகின்றதோ வென்றும் நிர்க்குணத்தைக் கூறும்போது சுயம்பிரகாசத்திற்குப் பரப்பிரகாசம் எங்ஙனமுண்டாய் விடுகின்றதோவென்றும் சுருதி, பயமுடயதாய் “இவையனைத்து நிச்சயமாய்ப்பிரம்மமே” “எல்லாக் கருமமுடையது எல்லாக் காமமுடையது” என்னுஞ் சுருதியிருத்தலால் தனித்தனி மகிமையுடையதாகக்கூருமல் முழு அபேதவடிவமாய் அதுவல்லாதது இல்லை யென்னும் பொருளுடய அதத்து வியாவிருத்தியினுல் சகுணவடிவத்தையும், அதுவல்லாததான அவித்தை அவித்தையாகாரியமான இரண்டுபாதிகளையும் அதுவல் லாதது அதத்து என்னும் பொருளுடைய அதத்துவியாவிருத்தியைக் கொண்டு விட்டுவிடாத லக்ஷணையினுல் மித்தையென்று நீக்கி நிர்க்குணவடிவத்தையுங் கூறுகின்றது; அதாவது மாயா அவித்

தையா வுபகிதசைதன்னியத்தில் சக்தியையுடையது தத்பதமென்றும் அதன்காரியமான புத்தி முதலியவற்றில் உபகிதமான சைதன்னியத்தில் சக்தியையுடையது துவம் பதமென்றுங்கொண்டு உபாதிகளைநீக்குதலினல் உபகிதமாகாதசைதன்யம் சுயம் பிரகாசமாயினும் அதனுகாரவிருத்தி மாத்திரத்தை உண்டாக்கு தலினல் அவித்தை அவித்தையா காரியங்களையழித்து போதிப்பதைப் போலாகின்றது. இவ்வளவான் முக்கியவாக்கிற்கு விஷயமாகிறதில்லை. ஆகையால் சகுணவடிவம் உணரப்படினும் முடிவின்றியது நிர்க்குணவடிவம் ஒன்ருயினும் உணரப்படாதது என்னுமிவற்ருல் எவரானுந் துதிக்கமுடியாதது என்ருலும் அன்பருக் கருளும் வண்ணம் விருஷபம் பிணகம் பார்வதி கங்கை மான் மழு சந்திரன் முதலியவற்ரோடும் ஆவிர்ப்பாவமாகும் திவ்விய மங்களவடிவில் அனைவாது மனவாக்குகளுஞ் செல்லுகின்றன வாகலின் பிரம்மாமுதலியோரானும் நம்மனோரானுஞ் செய்யப்படுந் துதிசமானமாம். துதியுங்கூடுகின்றமையின் முன்னுக்குப்பின் முறணுமின்ரும் எ - று.

(அ-கை) இங்ஙனஞ் சிவபெருமான் துதிக்கத்தக்கவரேனும் அவர்சர்வக்ஞராதலின் அவருக்குப்புதியதாகாத துதியால் மனேப்பிரீதியின்று அதனற்பிரசாதமில்லை அஃதின்மையாற் பலனுமின்றென மீண்டுந்துதிக்குப் பயனின்மையுண்டாகுங்கால் பயனுடைமையைப் பகர்பவராய்த்துதிக்கின்ரூர்.

மதுவென விரிந்து பரவமு துறைந்த மறைகளது தந்த நினின்முனே, விதிமொழியு மென்கொன் மகிழ்வுதரு முன்றன் விரிகுணமி யம்பின் வினையினன், மதியெனது மிந்த மொழிதெளியு மென்று மருவிநினை நின்றதுதியிலே, முதமொடு புகுந்த தெதனினு நிறைந்த முரணர்கள் புரங்கண் மதனனே. (3)

(இ-ள்) எதனினும் - எவ்வுலகினும், நிறைந்த - தமதாணையைச் செலுத்திய, முரணர்கள் - அசுரருடைய, புரங்கள் - முப்புரங்களை, மதநனே - அழித்த அண்ணலே! மதுஎன விரிந்து தேன்

போல் விளங்குவதாய், பரவமுதுறைந்த - மேலான அமிர்தம்போன்ற தான, மறைகள் - வேதங்களைத், தந்த - திருவாய் மலர்ந்தருளிய, நினின்முன் - தேவரீரது சந்நிதியில் (சொல்லப்படும்) விதிமொழி யும் - பிரம்மாவின்வாக்காகிலும், என் மகிழ்வுதரும் - தேவரீருக் குச் சந்தோஷத்தையுண்டாக்குங்கொலோ? (உண்டாக்காதென்ற படி) (அ - கை) அங்ஙனமேல்துதியால் யாதுபயனெனிற் கூறு கின்றார். எனதுமதி - என்புத்தி, உன்றன் - தேவரீரது, விரிகுண மியம்பில் - அளவுகடந்த மகிமையான குணங்களைக்கூறிடில், வினை யினால் - அதனாலாகும் புண்யத்தால், இந்த மொழி தெளியும் என்று-இந்த இழிவினையுடைய யென்வாக்குப் பரிசுத்தமாமென்று, நினைமருவிநின்றதுதியிலே - தேவரீரைச் சம்பந்தித்தவித்தோத்தி ரத்தில், முதமொடு - மிக்கவன்புடன், புகுந்தது - முயல்கின்றது எ - று

(வி-ரை) மதுரமான சத்தகுணாலங்காரத்தோடுங்கூடியதா தலின் இனிமையானதும் அமுதம்போன்று மிகக்கொள்ளத்தக்கது மான வேதத்தை மூச்சுக்காற்றுவிடுவதுபோல் மிகஎளிதாயுண்டாக் கின தேவரீருக்குப் பிரம்மாவின் வாக்காகிலும் ஆச்சரியகாரனமா காது. மது பரவமிர்தமென்னு மிவ்விரண்டுவிசேஷணங்களால் சிவ பெருமானது வாக்கின் சத்துத்திலும் பொருளிலுமுள்ள ஒப்பற்ற உயர்வாந்தன்மைகூறப்பட்டது. சத்தத்தில் குணாலங்காரமே யன்றி அர்த்தத்திலும் குணாங்காரமான மேன்மையுடைய பிரம்மா வின் மிகவுயர்வையுடையவாக்கும் எவருக்கு ஆச்சரியகாரணமாகா தோ அவருக்கு நம்மனோரது வாக்கைப்பற்றி யென்னை கூறுவது. ( அ - கை ) அப்போது துதிப்பதினால்பலன்யாது எனில் தேவரீ ரது குணங்களைப் புகழ்தலாலாகும் புண்ணியத்தால் எனது வாக்கை சுத்தம் பண்ணுவேனென என்மன மெழுகின்றதேயன்றி துதியின் சாமர்த்தியத்தால் தேவரீரைமகிழ்விப்பேனென்னுங்கருத் தாலன்று எனக் கூறினார். வாக்கின்பரிசுத்தத்தன்மையானே மன தின் பரிசுத்தத்தன்மை காலதாமதமின்றியுண்டாகுமென்று துதிக் குப்பலன் பகரப்பட்டது. எ - று.

(அ-கை) இங்ஙனஞ் சிவபெருமான் துதிக்கவிடயமாவரென்றும் துதிபயனுடையதென்று நிலைபெறுத்தி அவரதுண்மையிலும் விவாதஞ்செய்கின்றவர்களான மிக்க பாபிகளைக் கண்டிக்கின்றவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

**வேத மும்புக மூலகு தயதிதி வீழ லுஞ்செயும் விரி குண மதனினாற், பேத முந்தரு திரிவித தனுவினிற் பேண வுந்திக ழுறுவது வெதுவதா, மோது மூன்றிரு வயிசுவ ரியமதை யோர்வ திங்கில வுளர்சில ருலகிலே, மோத மொன்றில ரினியது மலவது மோக நிந்தையை யழிசெய மொழிவரால். (4)**

(இ-ள்) இங்கு ஓர்வது இலஉளர்-இவ்வுலகிற் பிரக்ஞையற்ற மந்தமதியினரும், உலகிலே - மூன்றுலகிலும், மோதமொன்றிலர்-மகிழ்வின் காரணமானபுண்ணியமற்றவரும், (ஆன)சிலர் - சிலபேர்கள், வேதமும்புகழ் - வேதங்களாற்பிரதிபாதிக்கப்படுவதாயும், உலகுதய திதி விழலுஞ் செயும் - உலகங்களின் உற்பத்தி திதி நாசங்களைச் செய்வதாயும், விரி குண மதனினால் - விரிந்த சத்துவமுதலிய குணங்களால், பேதமுந்தரு - வேற்றுமையைக் காட்டுகின்ற, திரிவித தனுவினில் - பிரம்மாமுதலிய மூன்று சரீரங்களில், பேணவும் - அன்புசெய்யத் தக்கதாயும், திகழுறுவது - விளங்குகின்றதான, எது-யாதொரு உன் ஐசுவரியமுண்டோ, அதாம் - அதனை, அழிசெய - கெடுக்கும் பொருட்டு, இனியதும் - அவிவேகிகளுக்கு இனிமையானதும், அலவதும் - விவேகிகளுக்கு இனிமையாகாததும், மோகநிந்தையை - உலகமயக்கக்காரணமானதுமான பழிப்புரைகளை, மொழிவர் - கூறுநிற்பர் எ - று.

(வி-ரை) ஆக்ஷேபத்தோடு கூக்குரலிடும் பல தாரதம்மியமான சத்தங்களுக்கு மோகநிந்தையெனப்பெயர். இம்மோகநிந்தையை நாநாவிதஅகங்காரத்தாற் செய்தலினாலும், சர்வப்பிரமாணத்தால ளக்கப்பட்டதனை அழிக்க இச்சிக்கின்றதினாலும் மந்தமதியுடமை விளங்குகின்றது. இம்மோகநிந்தையால் தேவரீரது ஐசுவரியத்திற்கு அழிவின்றாம். மற்றோ அவர்களுக்கே அதோகதியுண்டா

மென்பதுபொருள் எங்ஙனமாயஐசுவரியமெனின் "உலகுதயதிதி வீழலுஞ்செயு" மென்ற ஏதுவையுடைய அநுமானத்தாற் கூறப்பட்டது. அதையும். "சகங்கள் சனனமது வென்னிலதோ" வென்ற 6-வது செய்யுளில், வெளிப்படையாகக்கூறுவர். "சர்வவேதங்களும் எப்பதத்தைக் கூறுகின்றனவோ" என்னுஞ் சுருதியால் சர்வவேதங்களால் தாத்பரியமாகப் பிரதிபாதிக்கத்தக்கவஸ்து எனப்பட்டது. "வேதமும் புகழ்" என்றதால் ஆகமப்பிரமாணங்கூறப்பட்டது. உண்மையில் ஒன்றாயினும் சத்துவமுதலிய குணங்களால் விநோதமாய்க்கொண்ட பிரம்மாமுதலிய மூன்றுசரீரங்களிலும் (அவ்வயிசுவரியம்) வெளிப்படையாக்கப்பட்டது. இஃதெல்லா அவதாரங்கட்கு முபலக்ஷணமாம். இதனால் பிரத்தியக்ஷப்பிரமாணம் பிரதிபாதிக்கப்பட்டது. இங்ஙனஞ் சர்வப்பிரமாணபிரசித்தமான தேவரீரது ஐசுவரியத்தைக்குறித்த மோகநிந்தை மூன்றுலகிலும் நன்மையென்பது அற்பமுமின்றிய அபாக்கியத்தன்மையால் அவர்களுக்கு இனிமையல்லாத தாயினும் இனிமையாகத் தோன்றுகின்றது. எ - று.

(அ-கை) எவர்கள் ஆன்மப்பிரத்தியக்ஷத்தையும் அழிக்கின்றனரோவேதங்களையும் வேறுவழியாகவருணிக்கின்றனரோஅவர்கள், பிருதிவிமுதலியன கருத்தாவையுடையன காரியங்களாதலின் கடாதிகள் போன்று என்னும் அனுமானத்தானே கண்டிக்கத்தக்கவர் என்று "உலகுதயதிதிவீழலுஞ்செயும்" என்னுமிதனாலவ்வனுமானங் குறிப்பிக்கப்பட்டது. ஆண்டு முற்செய்யுளிற் சொன்ன மோகநிந்தையின் பீஜத்திற்குப்பிரதிகூலமான யுக்தியைக்கூறுபவராகவே பூர்வபக்ஷிகளைக்கண்டிக்கின்றவராய்த் துதிக்கின்றார். அல்லது எங்ஙனமாயமோகநிந்தையைக் கூறுகின்றன ரென்னும் அவாநிகழுங்கால் அதனைக்கூறுகின்ற வராய்த் துதிக்கின்றார்.

நாத னுஞ்சக ரஞ்சக னுகுமே னுடிலென்றொழி லன்றனு வன்கொலோ, யாத றுங்கர ணன்சக காரணன் யாது வன்றல னென்று வரதனே, யோது சங்கைய தொன்றி லுன்செல்வமு டேரி டுந்தக வின்றிய தீயதாம், போதரும் படி யம்புவிமாமயற் போத நைந்தவர் நிந்தை புரிவரால்.(5)

(இ-ள்) வரதனே - வள்ளலே! மாமயல் போதம் நைந்த வர் - மகத்தான மயக்கத்தா லறிவழிந்த சிலர், நாதனும் - பரமேசு வரனும், சகாஞ்சகனுகுமேல் - உலகங்களைச் சிருஷ்டிப்பவரானுல், நாடில் - அதனை யாராயுமிடத்தில், என்ருெழிலன் - சிருஷ்டிக ருத்தா சிருஷ்டிக்கனுகூலமான என்னதொழிலை யுடையவர், (என்) தனுவன் - எச்சரீரத்தையுடையவர், யாதுறுங் காணன் - எந்தவுபா தானத்தை யுடையவர், (யாது) சககாரணன் - எந்த நிமித்தகார ணத்தை யுடையவர், யாது வன்றலன் - எந்தஸ்திரமான வாதாரத் தில் சிருஷ்டிக்கின்ருர், என்று ஓதுசங்கையது - என்று கூறப்ப டும் சங்கையான, ஒன்று-ஒருசங்கையேனும், ஊரிடுந்தகவின்றிய - செல்லயோக்கியமின்றிய, உன்செல்வம் ஊடு - தேவரீர் ஐசுவரி யத்தில், அம்புவிதீயதாம் போதரும்படி - உலகம் அழிந்து போதற் பொருட்டு, நிந்தைபுரிவர் - பழிப்புரைகளைப்பகராநிற்பர் எ - று.

(வி-ரை) சுருதியை அனுசரிக்காத சுதந்திரதருக்கத்திற்கு விஷயமாகாதஐசுவரியமுடைய தேவரீரிடத்தில் உலகைவஞ்சிக்கும் பொருட்டுச் சில அறிவிலிகள் குற்றமுடைய தருக்கங்களைக்கூருநிற் பர். பிரமாணங்கள் விளங்குவனவின்ருதலால் தம்மால்விளக்கமுடி யாததனிடத்தில் பிரமாணத்தன்மையில்லாதன என்பது பொருத்த மேயென்றபடி. அக்குதற்கநிந்தை யெங்ஙனமெனிற் கூறுகின்ருர். சர்வ உலகங்களையுஞ் சிருஷ்டிக்குங்கருத்தாவிற்குத் தொழில்யாது? கருத்தாவடிவான சரீரம்யாது? சககாரிகாரணம்யாது? இருப்பிடம் யாது? உலகாகாரமாய்ப் பொருந்து முபாதானம்யாது? குலாலன் தனதுடம்பின்ருெழிலால் தொழிலுடைய சக்கரக்கிரியை யாலும், தண்ணீர் நூல்முதலிய உபாயத்தாலும் சக்கரமுதலிய ஆதா ரத்தில் உபாதானவடிவமண்ணைக் கடாகாரமாய்ச் செய்கின் ருன். இங்ஙனமே யுலககருத்தாவுங்கூறத்தக்கவர். இதனுற் குய வன் முதலியோர் போன்று அநீஸ்வரனேயென்பது அபிப்பிராயம். கடமுதலியதிருஷ்டாந்தத்தால் பிருதிவி முதலியன கருத்தாவையு டையனவாகச் சாதிக்கப்படுவனவேல் கடமுதலியவற்றின் கருத்தா வினிடம் கருத்தாத்தன்மைக்கு உபயோகமாக எவ்வளவு சாமக் கிரியை காணப்படுகின்றதோ திருஷ்டாந்தம் சமமானபடியால்

பிருதிவிமுதலிய வற்றின் கருத்தாவினிடத்திலும் அவ்வளவு சாமக்கிரியையே கருத்தாத்தன்மையின் உபயோகமாகக் கொள்ளவேண்டும்; இங்ஙனங்கொள்ளினோ அவர்நம்மனோரையொத்தலின் அநீஸ்வரனேயாவர். கொள்ளாக்கால் கருத்தாத்தன்மையே பொருந்தாமையால் கருத்தா இன்று என்னும் "உபயதாபாசரச்சு" முதலியநியாயம் மோகநிந்தையானகுதர்க்கமாம். இனி சித்தாந்தம் பிரதிபாதிக்கின்றூர். விசித்திரமான நாநாசக்தியோடுங்கூடிய மாயாவசத்தால் சர்வத்தையுஞ்சிருஷ்டிப்பவராயும் சர்வதருக்கங்களுக்கும் எட்டாதவராயும் இருக்குந்தேவரீரிடத்தில் இம்மோகநிந்தையான குதர்க்கங்களுக்கு அவகாசமின்று என்பது பொருள். "எப்பொருள் சிந்தைக்கெட்டாதோ அதுஎங்ஙனந்தருக்கத்தால் நிச்சயமாம்" என்றுங் கூறப்பட்டுளது. வியாப்தி (அவிநாபாவரூபசம்பந்தம்) இல்லாமல் சாமானுதி காண்ய (தானிருக்குமிடத்திலிருத்தல்) மாத்திரத்தால் சாதிக்கக்கூடாதாகலின் கடமுதலியகருத்தாவினிடம் எவ்வளவு சாமக்கிரியைகள் காணப்பட்டனவோ அவ்வளவு சாமக்கிரியைகளைப் பிருதிவிமுதலியவற்றின் கருத்தாவினிடத்திலும் நிச்சயிக்கத்தக்கனவன்று. அங்ஙனமின்றேல் அடுக்களையில் வன்னிதூமங்களின் வியாப்தியைக்கொள்ளும்போது விசிறி முதலியதுங் காணப்பட்டது என்று பர்வதமுதலியவற்றிலும் அதன் அனுமானமுண்டாகும். ஆகலின் காரியத்தன்மை கருத்தாத் தன்மையின் வியாப்தியையுடையது, கருத்தாத்தன்மை சொப்பனுதிபோன்று சககாரிகளின் வியாப்தியையுடையதன்று. இவ்விஷயம் முன்னுசிரியர்களால் மிக்க கண்டிக்கப்பட்டிருத்தலின் சாந்தியையடைகின்றோம் எ - று.

(அ-கை) இங்ஙனம் விரோதமான யுக்தியைக் கண்டித்து அவிரோதமானயுக்தியைக்கூறுபவராய்த் துதிக்கின்றூர்.

சாவயமா புஞ்சகங்கள் சனனமது வென்னிலதோ
சகங்கட் கேதான், றேவனையா தரித்திடா துதயவிதி யென்
னுளதோ சிவனுற்பி, னேவிடுகா ரணங்களுல குதயமதி
லெதுவெதனு லமைப்பூ சிப்பான், மேவுமகா சமுசயரா
யிம்மூடர் மெலிகின்றூர் விபுதர் மேலோய். (6)

(இ-ள்) விபுதர்மேலோய் - தேவசிரேஷ்டரே !, சகங்கள் - பிருதிவிமுதலிய வுலகங்கள், சாவயவமாயும் - தமது உபாதான மான அவயவத்தோடுங் கூடியனவாயிருந்தும், என் சநநமது இல தோ - உற்பத்தியற்றனவா ?. சகங்கட்கு - உலகங்களின், உதய விதி - உற்பத்திக்கிரியை, தேவனையாதரித்திடாது - ஒரு கருத்தா வினிடம் பொருந்தாமல், உளதோ - உண்டாகுமா?, சிவனுற்றின் - அக்கிரியைகளைச் சிவனுச்செய்கின்ருன் ?, ஒவிடுகாரணங்கள் - சொல்லாநின்ற சாமக்கிரியை, உலகுதயமதில் - உலகத்தின் உற்பத் திக்கு, எது - யாது, எதனுல் - யாதோவோர்மயக்கத்தால், உமைப் பூசிப்பான் - தேவரீரைப்பூசிக்கும் விஷயத்தில், மேவும் மகா சமு சயராய் - பொருந்திய அதிக சந்தேக முடையவர்களாய், இம்மூடர் மெலிகின்ருர் - இந்தமிக்கபாபிகள் சமுசாரத்தில் நலிவடைகின் ருர்கள் எ - று.

(வி-ரை) பிருதிவிமுதலியவுலகங்கள் தமது உபாதானகார ணத்தோடுங்கூடியனவாகலின் உற்பத்தியுடையன "விகாரம்வரை விபாகம் (பேதம்) உண்டாம் (கடமுதலிய) லோகம்போல்" என்னு நியாயத்தினுனும், தனது சமானமான சத்தையையுடைய பேதத் தின் பிரதியோகித்தன்மையானே (பேதத்தையுடைமையால்) உற் பத்தித்தன்மை நியமத்தானும்; அவை அவயவமான தமது காரணத் தோடுங்கூடியனவாகின்றன. ஆகையால் உற்பத்தித் தன்மையாகிய எது பொருத்தமுடையது. அங்ஙனமே அப்பிருதிவிமுதலியவற் றின் ஜனிக்கிரியை (உற்பத்திதொழில்) தனக்கோர் கருத்தாவையு டையதாயாகாது உதயமாமா? ஆனுலுடையதாகவே யுதயமாம். இத னுல், காரியத்தன்மை கருத்தாவையுடையது என்ற இடத்தில் எது பிறழ்ச்சியில்லாதது என்று கூறப்பட்டது. ஆகலின் ஆண்டு எது அனைகாந்திகமன்று. தனதுடலினுற்பத்தியையு மறியாத அநீஸ்வர னுனஜீவனே நினைக்கொணுத விசித்திரங்களோடுங்கூடிய பதினுன் குபுவனங்களையுஞ் சிருஷ்டிப்பான் ? ஆனு லீஸ்வரனே சிருஷ்டிப் பான். அதனுல் சிருஷ்டிசாமக்கிரியையை நீயே பகர்வாயாக(அ-கை) இங்ஙனந் தோஷமுடைய அனுமானங்களைக் கண்டித்து சங் கைசெய்த வேறுதோஷங்களையுங் கண்டிக்கின்றவராய் முடிக்கின்

ரூர். எதனால் தேவரீர் சர்வப்பிரமாணப் பிரசித்தரா யிருந்தும் இவர் மூடராய்த் தேவரீரிடம் சமுசயத்தை யடைகின்றனரோ அதனாலிவர் விபரீதமுடையவரென்பதற்கு யாது சொல்லவேண்டும் என்பதுபொருள். "ஜந்மாதி யிதற் கெதிந்தின்று" என்னு நியாயமும் "இப்பூதங்களெதினின்று முண்டாகின்றனவோ உண்டாயின வெதனாற் சீவிக்கின்றனவோ எதில் லயமடைகின்றனவோ அது பிரம்மம்" "ஆனந்தம் பிரம்மமென்றறியவேண்டும்" என்னு மிவை முதலிய சுருதிகளும் பரமேசுவரனது உண்மையிற் பிரமாணங்களாம்; இவைமுதலிய சுருதிசூத்திரங்களையனுசரித்த தருக்கமாத்திரத்திற்கு அனுமானம் அனுகூலமாம். சுதந்திரமாயனுமானம் பிரமாணமாகமாட்டாதென்றறியவேண்டும் எ - று.

(அ-கை) இங்ஙனம் பிரதிகூலதருக்கத்தை முதற் கண்டித்துப் பரமேசுவரரின் வெளிமுகர்களை யோட்டி சர்வசாஸ்திரப்பிரஸ்தானங்களும் நேராகவாயினும், பரம்பரையாக வாயினும் பரமேசுவரனிடத்திலேயே கருத்துடையன என்று கூறுகின்றவராய்த் துதிக்கின்றூர்.

பன்னெறி மறையர் சாங்கியர் யோகர் பசுபதி மதத்தர்வை ணவரே, மன்னுறு சுவையின் பலவகை யதனான் மருவிடு பின்னநூல் களிலே, நன்னெறியிதுவே நன்னெறியெனவே நதிகளுக் குததியே போன்று, செந்நெறி குடிலநெறியுறு நரர்க்குச் செறிவுறு சிவபத மொருநீ. (7)

(இ-ள்) தேவசிரேஷ்டரே மருவிடும் பின்னநூல்களிலே - வெவ்வேறாகப் பொருந்திய சாஸ்திரமாகியப் பிரஸ்தானங்களில், மன்னுறு - நிலைபெற்ற, சுவையின்-உருசியின், பலவகையதனால் - நாநாவிதங்களால், நன்னெறி இதுவே-இம்மார்க்கமேயுயர் வானது, நன்னெறி-இம்மார்க்கமே மேன்மையானது, எனவே-என்று, நதிகளுக்கு - சர்வநதிகளுக்கும், உததியேபோன்று - ஒரே சமுத்திரம் இருப்பிடமாவது போல், செந்நெறி - நேரான மார்க்கத்தையும், குடிலநெறி - கோணலான மார்க்கத்தையும், உறும் - அடைபவரான மனிதர், பன்னெறி - பலவழியினையுடைய - மறையர் - வேதாந்தி

கள், சாங்கியர் - சாங்கியமதஸ்தர்கள், யோகர் - யோகமதஸ்தர்கள், பசுபதிமதத்தர் - சிவாகம மதஸ்தர்கள், வைணவர் - விஷ்ணு வுபாசகர்கள், என்னும் நரர்க்கு - ஆகிய அதிகாரி அனதிகாரிகளான சர்வமனிதர்களுக்கும், செறிவுறு - அடையத்தக்கபொருள், சிவபதமான ஒரு நீ - சிவபதமான ஒப்பற்றதேவரீரேயாம் எ - று.

(வி-ரை) நாநாவிதமான அவாந்திர(மத்திய) மார்க்கங்களையுடையதாய் நேராகவும் வளைவாகவும் இருக்கின்ற மதங்களையுடைய அதிகாரி யனதிகாரியான சர்வமனிதர்களுக்கும் அந்தந்த சாதன அனுஷ்டானங்களால் சாக்ஷாதாகவேனும் பரம்பரையாகவேனும் தேவரீர் ஒருவரே யடையத்தக்க சுவாமியாயிருக்கின்றீர் அன்னியரொருவருமில்லையென்பது பொருள். இப்பொருளில் திருஷ்டாந்தங்கூறுகின்றார். எங்ஙனம் நேரானவழியிற்செல்லும் கங்கை நர்மதைமுதலியன சமுத்திரத்தை நேரேயடைகின்றனவோ யமுனை சரயுமுதலியன கங்கைமுதலியவற்றில் பிரவேசித்தல் வடிவ வளைந்த வழியிற் சென்று பரம்பரையாகச்சமுத்திரத்தையே யடைகின்றனவோ அங்ஙனமே வேதாந்தவாக்கிய சிரவணமனனநிஷ்டர்கள் தேவரீரை நேரேயடைகின்றனர். ஏனையோர் அந்தக் கரணசுத்தியின் தாரதம்மியத்தால் பரம்பரையாகத் தேவரீரையே யடைகின்றனர். சேதனத்தன்மையானே மோக்ஷத்திற்கு யோக்கியத்தன்மையிருத்தலினானும் பரமான்மாவாக அங்கீகரிக்கப் பட்டிருத்தலினானும் தேவரீரையேயடைகின்றனர் என்பதுபொருள். விரைவிற்பயனளிக்கு மின்நேர்வழியினைவிட்டு வளைந்தவழியில் ஏன்செல்லுகின்றனரெனிற் கூறுகின்றார், "பின்னம்மருவிடு நூல்கள்" என்று. அதாவது, பிரஸ்தானமான சாஸ்திரங்கள் வெவ்வேறாக இருத்தலினால் அதில் இதுவேயெமக்கு இதமானது; இதுவேயெமக்குச் சிரேஷ்டமானது என்று பலவகை இச்சை உண்டாகின்றது. அதனால் முன்னுதயமான அவ்வக்கர்ம்ம வாசனை வசத்தால் நேரானதென்றும் வளைந்ததென்றும் நிச்சயஞ்செய்யமுடியாமையினால் வளைந்த வழியிலும் நேரானது என்னும் மயக்கத்தினாற் செல்லுகின்றனரென்பது பொருள். அப்பின்னநூலான பிரஸ்தான பேதங்களை யுடையவரை மறையர், சாங்கியர், யோகர், பசுபதி மதத்தர், வைணவர் என்று

கூறினர். அதனால் மூன்று வேதவாசகமானமறையென்னுஞ் சத்தத்தால் பதினெட்டு வித்தைகளும் உபலக்ஷிக்கப் பட்டுநிரூபிக்கப் படுகின்றன:—ஆண்டு இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம் என வேதங்கள் நான்கு. சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம்,சந்தஸ்,ஜோதிஷம் என வேதாங்கங்கள் ஆறு; புராணங்கள் நியாயம் மீமாம்சை தரும சாஸ்திரங்கள் என உபாங்கங்கள் நான்கு; ஈண்டு உபாங்கங்கள் புராணங்களில் அடக்கம். வைசேஷிகசாஸ்திரத்தை நியாயசாஸ்திரத்திலும், வேதாந்த சாஸ்திரத்தை மீமாம்சை சாஸ்திரத்திலும், மஹா பாரதம்,இராமாயணம், சாங்கியம், பாதஞ்சலம், பாசுபதம், வைஷ்ணவ முதலிய சாஸ்திரங்களைத் தருமசாஸ்திரங்களிலுஞ் சேர்த்து பதினான்கு வித்தைகளெனப்பட்டன. “புராணங்கள்,நியாயம், மீமாம்சை, தருமசாஸ்திரம், அங்கத்தோடுங்கூடிய வேதங்கள்; இவை சதுர்த்தச வித்தைகளுக்கும் தருமத்திற்கும் இருப்பிடம்” என்றும் கூறப்பட்டுளது. இவைகளே நான்கு வேதங்களோடுங்கூடி அஷ்டாதச(பதினெட்டு)வித்தை களாகின்றன. ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தசாஸ்திரம் என்னு நான்குமுபவேதங்களாம்.இவ்வஷ்டாதச வித்தைகளையுடையோரே மறையர் சாங்கியர் எனப் பிரதி பாதிக்கப்பட்டனர். இன்றேல் குறைந்தவியவகாரமுண்டாம். ஏனைய யேகதேசிகளு மிவற்றிலடங்கலின் இவ்வளவேதான் சர்வ ஆஸ்திகரின் சாஸ்திரப்பிரஸ்தானங்கள். ஆனால் நாஸ்திகரின் பிரஸ்தானங்களிருக்கின்றன. அவை, மாத்தியமிகருக்குச் சூன்னியவாதமான ஒரு பிரஸ்தானமும், யோகாசாரருக்கு க்ஷணிகவிக்ஞான வாதமாத்திரமான வேறோர் பிரஸ்தானமும், சௌத்திராந்திகருக்கு ஞானகாரத்தால் அனுமானிக்கத்தக்க க்ஷணிகமாகிய வெளிப் பொருளைக் கூறும் வாதமான மற்றோர் பிரஸ்தானமும், வைபாஷிகருக்கு க்ஷண காலப்பிரத்தியக்ஷத்தைத் தனது இலக்ஷணமாகவுடைய க்ஷணிகமெனப்படும் வெளிப்பொருள் வாதமான வேறோர் பிரஸ்தானமும், ஆகிய நான்கு பிரஸ்தானங்கள் இருக்கின்றன. அங்ஙனமே சார்வாகர்களுக்கு தேகாத்மவாதமான வேறோர் பிரஸ்தானமும் திகம்பருக்கு தேகத்தின் வேறாய் தேகபரிணம ஆத்ம வாதமான

ஒரு பிரஸ்தானமும் ஆக இங்ஙனமெல்லாம் ஆறு பிரஸ்தானங்களாகயிருக்கின்றன; அவைகள் ஆஸ்திகபிரஸ்தானங்களில் அடங்காவாகலின் தனிமையாக ஏன் கூறப்படவில்லையெனின் அதுவுண்மைதான். அவைவேதத்திற்குப்புறம் பாகலின் மிலேச்சப் பிரஸ்தானம் போல் பரம்பரையாகவேனும் புருஷார்த்த சாதனமாகாமையால் உபேக்ஷிக்கத் தக்கனவேயாம். ஈண்டு சாக்ஷாதாக வேனும் பரம்பரையாக வேனும் புருஷார்த்த உபயோகமாயும் வேதார்த்தத்திற்கு அங்கமாயுமுள்ள பிரஸ்தானங்களின் பேதம் பிரதிபாதிக்கப்பட்டது. ஆகலின் குறைவு பட்டதென்னுஞ் சங்கைக்கிடமின்று.*

(அ-கை) இங்ஙனஞ் சர்வசங்கைகளையுங் கண்டித்துச் சிவபெருமானின் சொரூபத்தை நிரூபித்து அவதார ஸ்தானத்திலுள்ள அம்மூர்த்தியினையே துதிக்கின்றார்.

அருத்தமவ் வதனை நின்றன திமைப்ப தளித்ததை யமரர்க ளடைய, விருத்தநல் லிடபம் பரசரவோடு விபூதி புற் சருமங்கட் வாங்கர், தரித்திடக் குடும்ப கரணமதுமக் குத் தன்னுரு வதனிலே ரமிக்குந், திருத்தனைக் கழுதி ரதமெனும் விடயந் திகைப்புறச் செய்யுமாறிலதே. (8)

(இ-ள்) வள்ளலே! நின்றனது-தேவரீரது, இமைப்பது-புருவத்தின் சிறியதொழில், அளித்ததை-கொடுத்ததான, அருத்தம் அவ்வதனை-அந்தவந்த உயர்வான செல்வங்களை, அமரர்கள்அடைய-தேவர்கள் அடைந்திருக்கவும், உமக்கு - தேவரீருக்கு, குடும்பகரணமது - இல்லறத்தைத்தாங்கும் காரணங்களாக, விருத்த நல்இடபம் - முதியநல்ல எருதும், ஓடு - கபாலமும், பரசு - பரசாயுத

* பாலர்களின் வியுத்பத்தியின் பொருட்டு ஈண்டுள்ள பிரஸ்தான பேதங்களின் சொரூபம் பேதம் ஏது பிரயோஜன முதலியவற்றை ஸ்ரீ வீரசுப்பைய ஞானதேசி கேந்திரரவர்கள் மொழிபெயர்த்துத் தருக்காமிர்தத்தில் சேர்த்து இருத்தலின் அவற்றையறிய விரும்புவோர் ஆண்டுகண்டுகொள்க.

மான கோடரியும், அரவு - பாம்பும், விபூதி - பஸ்மமும், புற்சருமம் - மான் தோலும், கட்வாங்கம் - (முதுகெலும்பாலாகிய) கட்வாங்க மென்னும் ஆயுதமும், தரித்திட - தேவரீர் வைத்திருப்பது, தன்னுருவதனில் - தனது ஆன்ம சொரூபத்தில், ரமிக்கும் - சந்தோஷ மடைந்திருக்கும், திருத்தனை - ஐசுவரியமுடையவனைக், கழுதிரதமெனும் - பேய்த்தேரென்னும், விடயம் - சத்தாதிபஞ்ச விஷயங்கள், திகைப்புற - மயங்கும்படி, செய்யும் ஆறு இலது - செய்யும் வழியினை யுடையனவன்று எ - று.

(வி - ரை) பரிபூரண பரமேசுவரனுன வுனக்கும் குடும்ப சம்ரக்ஷணையின் எதுக்களாக விருத்தநல்ல இடபமும், கோடரியும், காபாலிகரிடம் பிரசித்தமான கட்வாங்கமென்னும் ஆயுதமும், தோலும், விபூதியும், சர்ப்பங்களும், மனிதர் தலை யெலும்பாகிய கபாலமும் ஆகிய இவ்வேழே இருக்கின்றன. இங்ஙனந் தரித்திரரான நீர் ஆராதனையால் சந்தோஷமடையினும் யாது கொடுப்பாயெனின், இந்திராதி தேவர்கள் தேவரீர் சேவையால் தேவரீரது சொற்ப கண்ணிமைப்பு அளித்த அந்த அந்த வுயர்வான சம்பத்தை அடைந்தனர் என்று கூறினுர். எவன் ஒருவனை அதிக ஐசுவரியனுக ஆக்குவானே அவன் அதைப் பார்க்கிலும் அதிக ஐசுவரிய முடையவனுகவே யிருப்பானென்பது உலகிலே பிரசித்தம். அங்ஙனமாங்கால் தேவரீர் பக்தரான இந்திராதி தேவர்கள் அதிகசம்பத்தை உமது பிரசாதத்தால் அடைந்திருக்கவும், தேவரீர் அதிகதரித்திரரா யிருப்பது எற்றிற்கெனின், எதனுற் சிதானந்த கனவடிவ தனது சொரூபத்தில் இரமித்துக் கொண்டிருப்பவனை இந்திரியார்த் தங்களாகிய சத்த பரிச ரூப ரச கந்தங்களென்னும் விஷயங்களான கானற்சலம் மயக்க மாட்டாதோ அதனுலாம் என்று கூறினுர். நீரின் விரோத சுபாவமுடைய சூரியகிரணம் நீர்வடிவாய் மயக்கத்தாற் காணப்படுகின்றது போல துக்க சுபாவமுடைய விஷயம் மயக்கத்தால் சுகவடிவாய்க் காணப்படுகின்றது என்ற விது உருவகத்தின் பொருள். யாண்டு சீவனும் தனது ஆன்மசொரூபத்தில் இரமிக்கும் போது விஷயாசக்தனுகானே நித்திய முக்தரான பரமேசுவரன்

விஷயங்களால் மயக்கப் படாரென்று ஆண்டு என்னசொல்ல வேண்டும் என்பது அபிப்பிராயம். அதனுல் கட்வாங்கம் கோடரி சர்ப்பம் உடுக்கை தோலாடை சாம்பர் மண்டையோடு இடபம் நான்குபுயம் பார்வதி யென்னு மிவைகளாலலங்கரிக்கப் பட்ட சிவபெருமான், குருவினுபதேசத் தாலுணரப்பட்டு துதிமுதலிய வற்ருல் ஆராதிக்கப்படுகின்ரு ரென்பது பொருள். உண்மையில் புருஷன் பிரதானம் மகதத்துவம் அகங்காரம் தன்மாத்திரை இந் திரியம் பூதங்கள் என்னுமிவைகளே இடபமுதலிய வடிவங்களாய்ச் சிவபெருமானை இரகசியமாய் உபாசிக்கின்றன என்பது ஆகமப்பிர சித்தம். இதனுல் இவ்வுலக குடும்பத்திற்குத் தத்துவங்களே உப கரண (காரண) மென்பது நிச்சயம் எ-று.

(அ-கை) இங்ஙனந் துதிக்கத்தக்க பரமேசுவரனுடைய சகுண நிர்க்குண சொரூபங் கூறப்பட்டன இனித்துதியின் பிரகார (விசேஷண)த்தை நிரூபிப்பவராய்த் துதிக்கின்ருர்.

சிலவரிப் புவன நிலையெனப் புகல்வர் சிலவர்க ணிலை
யில தெனவே, யலவர்கள் சமத்த மாகுமிவ் வுலகிலறைகு
வர் வியத்தமா மெனவே, விலகுமத் துதி கொண்டுனைத்து
தித் தடியன் வியப்புள னென்னவெட் கிலனே, வலவர்கள்
புரங்கண் மதனவா சால மருவிடு நாணமிந் திலதே (9)

(இ-ள்.) வலவர்கள் - அசுரரின், புரங்கள் - முப்புரங்களை, மதன - எரித்தவரே! வியத்தமாம் - பின்னபின்னமான, இவ்வுல கில் - இந்தலோகத்திலே. சிலவர் - சிலமதஸ்தர்கள், இப்புவனம் நிலையெனப் புகல்வர் - இவ்வுலகு நித்தியமானது எனப்பிரதி பாதியா நிற்பர், சிலவர்கள் - மற்றுஞ்சில மதஸ்தர்கள், நிலையிலது எனவே - அநித்தியமானது என்றும், அலவர்கள் - அவரல்லாத சில மதஸ்தர்கள், சமத்தமாகும் எனவே - நித்தியா நித்தியமென்னு மிரண்டுஞ் சமானமானது என்றும், அறைகுவர் - பிரதிபாதியா நிற்பர், இலகும் அத்துதிகொண்டு - இங்ஙனம் விளங்காநின்ற இவ் வாதிகளின் துதிகளைப் பார்த்தலினுல், வியப்புளன் என்ன - ஆச் சரியத்தை அடைந்தவனைப்போல், அடியேன் - தொண்டனுன

யான், உனைத்துதித்து - தேவரீரைத் தோத்திரஞ்செய்து, வெட்கிலன் - வெட்கத்தை யடையவில்லை, (ஏனெனின்) வாசாலம் - அதிகமாய்ப் பேசுதலான வாசாலத்தன்மை, மருவிடும் - பொருந்தாநின்ற, நாண் அறிந்திலது — வெட்கத்தை அறியமாட்டாது என்பதினாலாம் எ-று.

(வி-ரை.) ஒருவன் ஆச்சரியமானதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு அதன்பரவசனாய் உலகபரிகாசத்தைக்கவனிக்காமல் எப்படி சேஷ்டை செய்கின்றானோ அப்படியே நானும் அவ்வாதிகளின் துதிவிசேஷணங்களைக் கண்டு ஆச்சரியப்பட்டவனைப் போல் அதன்பரவசனாய் இவன் துதிக்கத்தெரியாதவ னென்று சனங்கள் நகைப்பார்களே யென்னும் பரிகாசத்தைக் கவனிக்காமல் துதிசெய்ய ஆரம்பித்தே னென்பது பொருள். அத்துதி விசேஷணங்களைக் கூறுகின்றார். சாங்கிய பாதஞ்சல மதானுசாரிகளான சிலர், இச்சர்வவுலகும் பிறப்பிறப்பற்ற சத்தானது என்கின்றனர். அதாவது அசத்திற்கு உத்பத்தியில்லை சத்திற்கு நாசமில்லை உத்பத்தி நாச சத்தங்களால் வெளிப்படல் மறைதல் மாத்திரம் குறிக்கப்படுகின்றன. அதனால் பரமேசுவரனும் அவ்வளவு மாத்திரத்திற்குப் பிரேரிக்கின்றார். அசத்தின் உத்பத்தியை யேனும் சத்தின் நாசத்தை யேனும் செய்கிறதில்லை என்கின்றனர். இது சத்காரிய வாதத்தில் ஒரு பக்ஷம். சுகதமதானுசாரிகளான மற்றுஞ் சிலர் இச்சர்வசகத்தும் நிலையற்றது க்ஷணிகம் என்கின்றனர். அதாவது, சத்தென்பது நிலையுடையதன்று பயனுடைய தொழிலை யியற்றுதலே சத்தியமாம். அதுவும் சத்தான பொருளின் பார்வையின் சம்பந்தத்தால் காலதாமதமாயுண்டாவதில்லை. ஒரு க்ஷணத்திலுண்டாம் பிரயோசனமுடைய சர்வதொழிலின் முடிவினின்றும் அடுத்தக்ஷணத்தில் அசத்தியமே யாகின்றது. அங்ஙனமே பரமேசுவரனும் க்ஷணிகவிக்ஞான பரம்பரை (தொடர்பு) ஆதலின் அவர் அசத்தின் உத்பத்திக்குப் பிரேரிக்கின்றார். சத்தின் ஸ்திரத்தன்மை (நிலையுடைமை)க்கின்று என்கின்றனர். இது சர்வக்ஷணிகவாத லக்ஷணமுடைய இரண்டாவது பக்ஷம். தார்க்கிகர்களான மற்றுஞ் சிலர் அவ்விரண்டு பக்ஷங்களையுங் கேட்கப் பொறாதவர்களாய் ஒன்

ரூன இவ்வுலகில் வெவ்வேறு தருமமுடைய நித்தியா நித்திய வஸ்துக்களைப் பிரதி பாதிக்கின்றனர். அதாவது ஆகாயங் காலந்திக்கு ஆன்மா மனம் பிருதிவி முதலியவற்றின் பரமாணுக்கள் என்பவை நித்தியம்,காரியதிரவியங்கள் அநித்தியம், பரமேசுவரன் அநித்தியங்ளின் உத்பத்திவிநாசங்களுக்கு பிரேரிக்கின்றூர். நித்தியங்களுக்கின்று என்கின்றனர். இது மூன்ருவது பக்ஷம்; இம் மூன்று மதங்களும் துவைதத்தை அங்கீகரித்தலின் அத்விதீய சந்மாத்திரமான பரமேசுவரனுடைய பரிசங்கூட அவற்றிற் கின்று. இங்ஙனம் உபாதியையுடைய குறைந்த ஐசுவரியவடிவாற் செய்யப்பட்ட துதியாண்டும் வெட்கத்தை யுண்டாக்குவது வென்பது பொருள். அப்போது நீரேன் வெட்கமடையவில்லை யெனிற் கூறுகின்றூர். வாசாலம் மருவிடும் வெட்கத்தை யறியாதது என்று. அதாவது, வாசாலமே வெட்கத்தைக் கெடுப்பது என்பது பொருள். இங்ஙனம் சர்வ விசேஷணங்களை யுடைய வாதாதி வாதங்களனைத்தும் ஆபாசமென (பொய்யென)ப் பிரதிபாதிக்கப்பட்டதனுல் அத்விதீய வாதமே சத்திய மாயும் இலஜ்ஜையின்றியதாயு மிருப்பதெனவறியத் தக்கது. இதுவும் "தாணிநீ மதிய நீ தண்ணிரு நீ" என்னும் 26-வது செய்யுளில் வெளிப்படையாகக் கூறுவார் எ-று.

(அ-கை) இங்ஙன மொன்பது செய்யுட்களாற் றுதிக்கு வேண்டிய பொருளை நிரூபித்து துதிசெய்ய ஆரம்பிக்கையில் சர்வ பிரபாவத்தையுடையயோருள் முதன்மையான ஹரிப்பிரம் மாமுதலியோரும் உனது பிரசாதத்தினுனே உன்னையபரோக்ஷமாயுணர்ந்தனர் என்று சிவபெருமானின் முடிவற்றமகிமையை வெளிப்படுத்து கின்றவாராய்த் துதிக்கின்றூர்.

சோதி புஞ்சநின் வடிவுடை மகிமையைச் சோக மிஞ்சுற வரியயன் முயல்வொடே, சேத னஞ்செய வடியினு முடியினுஞ் சேரவஞ்சின பினம்விசு வசமொடே, யோது மன்பொடு மிகுதுதி புரியவர்க் கோகைவந்தற வியல்பினி னருளினு, யாதி யங்கிரி யுறைபவ நினதடிக் கார ருந்தவம் பலமதென் னிலவதோ. (10)

(இ-ள்.) ஆதி - காரணரே!, அம்கிரி உறைபவ - அழகிய கைலைவாசரே! அரி - விஷ்ணுவும், அயன் - பிரம்மாவும், முயல்வொடு - பிரயத்தனத்தால், சோகமிஞ்சுற - மிக்ககஷ்டத்தோடு, சோதிபுஞ்ச நின்வடிவுடை - அக்கினிப்பிழம்பு வடிவானநினது, மகிமையை-பெருமையை, அடியினும் - பாதத்திலும், முடியினும் - சிரத்திலும், சேதனஞ்செய - அளவிட்டறிய, சேர - சென்றுபார்க்கும்போது, அஞ்சினபினம் - (முடியாமையால்) பயத்தையடைந்த பின்னர், ஓதும் - சொல்லாநின்ற, அன்பொடு - (தலைவணங்கிக் கைகுவித்தலான) சரீர சேவையோடும், விசுவசமொடே - (ஆஸ்திகபுத்தியான) மனதின் சேவையோடும், மிகுதுதிபுரியவர்க்கு-பெரிய தோத்திரத்தைச் செய்யானின்ற அவர்களுக்கு, ஓகைவந்துற-சந்தோஷமுண்டாதற் பொருட்டு, இயல்பினில் அருளினய் - உமது தருமமான கருணையால் அனுக்கிரகஞ் செய்தீர்கள், (அதனால்) நினது அடிக்கு - தேவரீரது திருவடிக்குச் செய்யப்படும், ஆர் அருந்தவம் - பொருந்திய தொண்டு, என்பலமது இலவதோ - பலனற்றதாமோ?, ஆனற் பலனுடையதே எ-று.

(வி-ரை) தேவரீர்த் திருவடிக்குச் செய்யும் சேவை தேவரீரது சாக்ஷாத் காரமுடிவான பலனையுங் கொடுக்கின்றது (அ—கை) ஆண்டன்வயு வியதிரேகங்களால் (உடன்பாடெதிர் மறைகளால்) காரணத்தன்மையைத் திடஞ்செய்ய பரமேசுவர சேவையின் வியதிரேகத்தால் (இன்மையால்) பலத்தின் வியதிரேகத்தைக் கூறுகின்றார், அக்கினிக்கூட்டமாய் நின்ற ஸ்தூலரூபமான தேவரீர் மகிமையை இவ்வளவுதானென்று அளவிட்டறிய மேலேபிரம்மாவும் கீழேவிஷ்ணுவும் எங்குஞ்செல்ல சக்தியுடையவரா யிருந்தும் அவர்சர்வப்பிரயத்தனத்தோடு சென்றும்அளவிட்டறிய முடியாதவரானர். எவருடைய ஸ்தூலரூபமே அளவிட்டறியமுடியவில்லையோ அவருடைய சூக்ஷ்ம ரூபத்தை அறிதல் வெகுதூரமென்பது பொருள். இதனல் பிரசித்தமான மஹாபிரபாவமுடைய பிரம்மவிஷ்ணுக்களும் தேவரீரது சேவையில்லாத படியால் தேவரீர் அறியப்படவில்லை யெனின் யேனையோரைக் குறித்து யாது பகரற்பாலதென வியதிரேகத்தைப் பிரதிபாதித்து; அந்வயத்தைக்

கூறுகின்றார். அந்த பிரம்மவிஷ்ணுக்களின் முயற்சி பயனின்றி யதான பின்னர் மனதின் சேவையாகிய ஆஸ்திகபுத்தியான விசுவாசத்தோடும் சரீரசேவையான அன்போடும் சிவபெருமானை அறிதற் பொருட்டு வாக்கின் சேவையென்னுஞ் சிரேஷ்டமான பெரியதோத்திரத்தைச் செய்தனர். எங்ஙனம் மலைபெரிய தாதலின் வாயு மழை முதலியவற்றால் விகாரத்தை அடைகிறதில்லையோ அங்ஙனமே யிவர் தோத்திரமும் பெரிய தாதலின் விக்கின முதலியவற்றால் இடைவிடுகிறதில்லை யென்பார் பெரியதோத்திர மென்றார். இங்ஙனந் துதித்தவர்களுக்கு யாதுண்டாயிற் றெனின், அவர் செய்தமுயற்சிக்கின்றித் தேவரீருக்குள்ள இயல்பான இறக்கத்தால் உமது சொரூபத்தைக் காண்பித்தீர் என்றார். ஆகையால் பிரம்மவிஷ்ணுக்களும் தேவரீர் தொண்டானேயே யுமது வடிவை யுணர்ந்தனர் ஏனையோருக்கென்ன சொல்லவேண்டுமென்று அந்வயம் பிரதிபாதிக்கப்பட்டது. இங்ஙனம் உமது சேவையானேயே சர்வமும் பயனுமென்று அந்வய வியதிரேகங்களாற்றிடஞ் செய்யப் பட்டது எ-று.

(அகை.) இப்போது அசுரனான இராவணனுக்குப் பரமேசுவரானுக் கிரகத்தைக் கூறுபவராய்த் துதிக்கின்றார்.

**எத்தனம தற்றுநிகழ் சத்துருவு மற்றதிரி யிப்புவன முற்று மிகவே, பத்துமுகன் யுத்ததின விற்பரவ சத்தவிரு பத்தெத புயத்தை யுளனோ, மத்தக மருப்பதும பத்திகொட மைத்தபத மப்பதஙன் மெய்ப்பலியதா, † முத்திடுதிரத்துடைய பத்தியின் வியப்பிது கொன் முப்புர மெரித்த முதலே. (11)**

(இ-ள்) முப்புரமெரித்த முதலே - திரிபுரத்தைத் தகித்த வள்ளலே, பத்துமுகன் - இராவணன், எத்தனமதற்று-யாதொரு பிரயாசையுமில்லாமல், நிகழ் - விளங்காநின்ற, சத்துருவுமற்ற - யாதொருசத்திரியுமின்றிய, மிகவே - பெரியதான, திரியிப்புவன முற்றும் - இம்மூன்றுலகங்களையும், எது - மற்றும்யாதொரு, யுத்த

† முற்றிடு மென்பது எதுகைநோக்கி முத்திடு மென்றாயிற்று.

தினவில் - போர்செய்யவேண்டுமென்ற அரிப்பினுல், பரவசத்த - அதன்பரவசமான, இருபதுபுயத்தை - இருபதுபுஜங்களேயும், உள ஞே - உடையவஞயிருக்கின்ருனே, (அது) பதுமப்பதம் - தேவரீரது திருவடித்தாமரைகட்கு, மத்தகம் - தனதுஒன்பது சிரங்களான - மருப்பதுமபத்திகொடு - வாசனேயுடைய தாமரைப்பூக்களின் வரிசையினுல், அமைத்த - இயற்றிய, நன்மெய்ப்பலிபதாம் - நல்ல உண்மையான அர்ப்பணத்தினுலாயதாம், முத்திடுதிரத்துடைய - அத்தியந்தஞ்சலனமின்றிய, பத்தியின்வியப்புஇதுகொல் - தலையன்பின் ஆச்சரியம்இவ்வசுரனடைந்திருப்பதன்றுகொல்லோ? . எ - று.

(வி-ரை) தேவரீரது சஞ்சலமற்றபக்தி யென்னுஞ் சேவையோடு தாமரைபோன்றுவிளங்குந் தனதுஒன்பது சிரங்களேயும் தனதுகைகளினுனேயே உமது திருவடிக்குச்செய்த அர்ப்பணத்தால் தனதுபிரபாவத்தைக்கேட்டதும்,இந்திரன்முதலிய தேவரனேவரும் அகங்காராதிகளேவிட்டுத் தனக்கு அடிமையாஞர்கள்; அதனுல் எதிரி இன்றியமூன்று லகங்களேயும், எதிரியின்மையால் மல்லருடன்போர்செய்தலிற்றினவையுடைய விருபது புயங்களேயும், பிரயத்தனமின்றி இராவணன் அடைந்தான். இங்ஙனம் இராவணனடைந்தது சிவபெருமான் திருவடித்தாமரைகட்கு மன்வாக்குக்காயங்களாலியற்றிய தொண்டின் பிரபாவத்தாலென்பது அபிப்பிராயம்.

(அ-கை) இங்ஙனம் இராவணனுக்குப் பக்திவசத்தாற் செய்யப்பட்ட அனுக்கிரகத்தை வெளிப்படுத்தி அவனுக்கே அகங்காரவசத்தால் உண்டான நிக்கிரகத்தைவெளியிடுபவராய்த்துதிக்கின்ருர்.

நின்பலத்த வாழ்வாம் வெண்மலேக்கு மேலு நின் பதத்த சேவை வலி மேவி, வன்புயத்த கானே வன்ருெழிற்கு ளேவும் வம்பனுக்கு மாயா வலியாலே, யுன்பருத்த சிராங்குலிக்க ஞேர்சா ருந்தவற்ப மேபா தலமீது, மின் பொருத்த மேவா தன்றுபெற்ற தீயோரின்று பெற்ற தோரா ரியல்பிதே. (12)

(இ-ள்) மங்களவடிவரே! நின்பதத்தசேவைவலிமேவி-தேவரீரது திருவடித்தாமரைகட்கியற்றிய தொண்டினலானவலுவையடைந்திருக்கும், வன்புயத்தகானே- திண்ணிய இருபதுபுயங்களென்னுங்காட்டை, மாயாவலியால், மயக்கத்தின் வல்லபத்தால், நின் - தேவரீரது, பலத்த - திடமான, வாழ்வாம் - வாசஸ்தானமான, வெண்மலேக்குமேலும் - கைலேயங்கிரியிலும், வன்றொழிற்குள் ஏவும் - அதை அபகரித்தலான கொடிய செய்கையில் தொழிற்படுத்திய, வம் பனுக்கு - துஷ்டனைராவணனுக்கு, உன் - தேவரீரது, பருத்த - பெரியதான, சீரார் - மகிமையுடைய, அங்குலிக்கண்-பாதத்தின் பெருவிரலின், ஓர் சார் அற்பமேஉந்த - நுனிப்பாகத்தால்நீர் சிறிது ஊன்றும்போது, பாதளமீதும் - பாதாளவுலகிலும், இன்பொருத்தம்-இனிமையாக நிற்றற்கிருப்பிடம், மேவாது இல்லாமற்போயிற்று, அன்றுதீயோர்பெற்றது - அப்போது உபகாரத்தையுடையந்ததீயோர், இன்றுபெற்றது ஓரார் - இப்போதுதாம் அடைந்திருக்கும் சம்பத்து அவர்தயையாலானது என்று நினேக்கமாட்டார்கள், இயல்பீது-கொடியோரது சுபாவகுணமிதுவேயாம் எ - று.

(வி-ரை) பாதத்தின்பெருவிரலின்நுனியை மெதுவாகத்தேவரீர்ஊன்றினமாத்திரத்தால்பாதாளவுலகிலும் சூராதிசூரனை இராவணனுக்கு இருப்பிடமின்ருயது; தேவரீரது இருப்பிடமான கைலேயங்கிரியை, உமதுசேவையால் பலத்தையடைந்திருக்கும் காடுபோன்றடர்ந்த இருபது புயங்களாலும் இதைக்கிளப்பி இலங்கையிற்ருபித்து விடுவோமென்னு மெண்ணத்தால் அதிகுரத்தன்மையோடு மெடுத்ததினலாம். உமதுபிரசாதத்தால் வலுவையடைந்து உமது வாசஸ்தானத்தை தூக்குதலான செய்நன்றி மறந்தலென்னுமிது ஆச்சரியமாம்.

“ஈசுவரானுக் கிரகத்தால் வலுவை யடைந்த இராவணன் தனது வலுவைப்பரீக்ஷிக்கும் பொருட்டு ஈசுவரனது வாசஸ்தானமான கைலாசத்தைத்தூக்க ஆரம்பித்தான். அதனுற் பயத்தையடைந்தபார்வதியால் பிரார்த்திக்கப்பட்ட சிவபெருமான் கைலாசம் கீழேபோகும்படி விரல்நுனியைமாத்திரம் மெதுவாக ஊன்றினர்.

அவ்வளவுமாத்திரத்தால் இராவணன் பலமற்றவனாய்ப் பாதாளத்திற்குச்சென்றான். மீண்டும் பரமேசுவரர் கருணையால் பிழைப்பித்தார்" என்பது புராணப்பிரசித்தம். இராவணன் செய்நன்றியை யேன்மறந்தானெனின், துஷ்டர் பொருளைச் சம்பாதித்துக் கொண்டு தாம்சம்பாதித்த காரணத்தை மறந்துவிடுவது அவரது இயல்பு என்பதினாலாம் எ - று.

(அ-கை) முன்னர் பரமேசுவரனிடம் மிகவுயர்வைக்காட்டிய இராவணனுக்கு மிகத்தாழ்மை யுண்டானதைப் பிரதிபாதித்து இப்போது சிவபெருமானிடம் மிகப்பணிதலையுடைய பாணாசுரனுக்கு அதிகமேன்மை யுண்டானமையைப் பிரதிபாதிப்பவராய்த் துதிக்கின்றார்.

பரம மேலெனினு மமரர் கோனினது பரவு செல்வ மது கீழதாய்ப், புரியு மூவுலகு மடிமை யாக வயம் புரிசெய் பாணன்மிக வெதுவதா, மருமை யாது மில துமது பாத மறை யனுதி னம்பணியு மவனினோர், வரத னேநினை வணங்க லான து வழங்கி டாததெது வளனையே. (13)

(இ-ள்) வரதனே - வள்ளலே! எது - யாதொரு, அமரர்கோனினது - தேவேந்திரனது, பரவுசெல்வம் - அதிகஐசுவரியம், பரம மேலெனினும் - அத்தியந்தஉயர்வையுடையதேனும், மூவுலகும் - மூன்றுலகங்களையும், அடிமையாக - தமக்குஏவலாளாக, வயம்புரி செய் - வசமாக்கிய, பாணன் - பாணாசுரனனவன், அது - அத்தேவேந்திரனது செல்வத்தினை, மிகக்கீழதாய்ப்புரியும் - அத்தியந்தந் தாழ்ந்ததாய்ச் செய்துவிட்டதுண்டோ, அதாம் - அப்படிச்செய்தது, உமதுபாதமறை - தேவரீரதுதாமரைபோன்றதிருவடிகளை, அனுதினம் - எப்பொழுதும், பணியும் - வணங்குகின்ற, அவனில் - அப் பாணாசுரனிடத்தில், யாது ஓர் அருமையானதும் இலது - யாதோராச்சரிய மானது மின்று, (ஏனெனின்) நினை வணங்கலானது - தேவரீருக்குச்செய்யும் அருச்சனையானது, எது வளனை வழங்கிடாது - எந்தஐசுவரியத்தைத்தான் கொடுக்கமாட்டாது, ஆனால் சர்வ ஐசுவரியத்தையுமளிக்கும் எ - று.

(வி-ரை) தேவேந்திரனது சம்பத்து மிகவுமுன்னதமாயினும் மூன்றுலகங்களையுந் தனது யேவலாளர்க்குச் சமமாய்ச் செய்த மகா பாணனென்னும் மாபலிச்சக்ரவர்த்தியின் புத்திரன் தனது ஐசுவரி யத்தினு மதை மிகத்தாழ்மைப்படுத்தினன். அது யேனையோரிடத் தில் ஆச்சரியத்தையுண்டாக்குவதேனும் தேவரீரது திருவடிகளை இடைவிடாது நமஸ்கரிக்கும் அவனிடத்தில் யாதோராச்சரியகாமு மாகாது. ஏனெனின் தேவரீருக்குச் செய்யும் நமஸ்காரமானது இவ்வளவு பலனைமாத்திர மளிப்பதன்று சர்வோத்கிருஷ்டமான மோக்ஷபலனையு மளிக்குமென்பது பொருள். சர்வோத்கிருஷ்டத் தன்மையும் அசிந்தியமாஹாத்மிய(நினைக்க வொண்ணுமகிமை)த்தன் மையும் சிவபெருமானுக் குண்டெனவிதனுற்குறிப்பிக்கப்படுகின் றது எ - று.

(அ-கை) இப்போது காளகூட சம்மாரத்தைக்கூறுபவராய்ச் சிவபெருமானைத்துதிக்கின்றார்.

மூவருட் கண்ண வகாலத்தி லண்ட முடிவுறு மாப யஞ்சார், தேவர் தயித்தியர் மேற்கிரு பாவயத் தேவிட முண்ணினதே, மாவழ கைச்செய லின்றென லில்லையெம் மாகள னிற்களங்க, மேவுல கின்பய மீர்விசனிக்கு விகாரமு மேன்மையகோ. (14)

(இ-ள்) மூ அருட்கண்ண - கிருபையோடுங்கூடிய மூன்று நேத்திரமுடையவரே! (தேவரீர்) அகாலத்தில் - பிரளயசமயமல் லாதபோது, அண்டம்-பிரம்மாண்டமானது, முடிவுறுமாப்யஞ்சார் - நாசமடையுமென்று மிக்கபயத்தை யடைந்த, தேவர்தையித்தியர் மேல் கிருபாவயத்தே - தேவாசுரர்களிடம் வைக்கப்பட்டகருணை யினால், விடம் உண்ணினது - விஷத்தையயின்றதாம், (அதனால்) களனில் - தேவரீர் கண்டத்தில், யெம்மாகளங்கம் - யாதொரு பெரிய கருமையுண்டாயினதோ (அது) மா வழகைச்செயல் - பெரிய அழகைச் செய்கின்றது, இன்றெனல் - இல்லை யென்று சொல்லுவது, இல்லை - இல்லையாம், அகோ - ஆச்சரியம், மேவும் உலகின்பயம்-பொருந்திய உலகத்தவரது அச்சத்தை, ஈர்விசனிக்கு-

கெடுக்கவேண்டுமென்ற சிந்தையை யுடையவருக்கு, விகாரமுமேன்மை-வேற்றுமைப்படுதலும் அலங்காரமே யாகுமன்றோ, எ-று.

(வி-ரை) திருப்பாற்கடல் கடையுங்காலத் துதயமாகிய காளகூடவிஷத்தை யுண்ட தேவரீர்க் கண்டத்தில் யாதொருகருமை யுண்டாயிற்றோ அது மிக்க சோபையை (அழகை)யேச் செய்கின்றது. பரமேசுவரன் சர்வத்தையும் நன்றாயுணர்ந்தவர் அதனால் விஷம் சர்வானர்த்தகாரண மென்று தெரிந்தவராயினும், அகாலத்தில் விஷ அலையின் வேகத்தால் பிரம்மாண்டமுடிவானமகாப்பிரளயம் வருகின்றதென்று இந்திரன் முதலியதேவாசுரர்கள் பயத்தை யடைந்தனர். அப்போது அவரிடம் வைக்கப்பட்ட தயையால், விஷத்தையுண்ணுஞ் சாமர்த்திய மன்னியருக்கின்றெென உலகையிரக்ஷிக்கும்பொருட்டுத் தாமேயுண்டார் என்பார் கிருபாவயத்தே விடமுண்ணினது என்றார். (அ-கை) விகாரவடிவ கருப்பு கண்டத்திலெங்ஙனஞ் சோபையைச் செய்யுமெனின் உலகினாது அச்சத்தை நீக்கும் சிந்தையையுடைய பரமேசுவரனுக்குண்டாகும் விகாரமுந் துதிக்கத்தக்க தாகலின் அழகைச் செய்யும் என்றார். அன்னியவற்றை யெல்லாம் விடுத்துச் செய்தலால் அச்சத்தினீக்கஞ் சிந்தனையாம். இதனால் உலகுபகாரத்தின் பொருட்டுண்டாந் தூஷணமுந் துதியாம் எ-று.

(அ-கை) இப்போது காமதஹனத்தைக் கூறுபவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

**எவனினது பாண மசுரசுர ரோடு மெளிநரரு மேயு முலகிலே, யவமதியி லாது வெவணுநித மேகியமருமடலோடு மதனனு, மவனுமுனை யேனை யமர ரிணைகாண வகநினைவு ரூப மருவினு, னவமதிய தானதடுபொறிவ லாரிலகிதமது வாகு மிறைவனே. (15)**

(இ-ள்) இறைவனே - தலைவனே! எவனினது பாணம்- எந்தமன்மதனது பாணம், அசுரசுரரோடு - தேவாசுரர்களோடு, எளிநரரும் ஏயும் உலகிலே - எளியமனிதர்களும் பொருந்திய எவ்வுலகங்களிலும், நிதம் - தினந்தோறும், எவனும் - எவ்விடத்

திலும், எகி - சென்று, அவமதியிலாது - (வெற்றியின்மையா லாகும்) நிந்தையில்லாமல், அடலோடு - வெற்றியோடு, அமரும்- திரும்பிவந்து பொருந்துமோ, மதனனுமவனும் - அம் மன்மதனும், உனை - தேவரீரை, எனை அமரர் இணைகாண - மற்றைய தேவர்களோடு சமமென்று நினைத்து தனது பாணங்களைப் பிரயோகஞ் செய்ததினால், அகம் நினைவுருபம் மருவினன் - (கண்ணாற்காணும் வடிவுபோய்) மனதால் நினைக்கத்தக்க வடிவையடைந்தான், (அதனால்) அடுபொறிவலாரில் - புலன்களை யடக்கிய சமர்த்தரிடம், அவமதியதானது-செய்யப்படும் அவமரியாதை, அகிதமதுவாகும்- தமது கேட்டிற்குக் காரணமே யாகும் எ-று.

(வி-ரை.) தேவர்களும் மனிதர்களும் பொருந்திய மூன்றுலகங்களிலுஞ் சென்று வெற்றியை யடைந்து திரும்பிவரும் பாணங்களையுடையமிகச்சமர்த்தனான மன்மதன் மற்றையதேவருக்குச் சமமாய்த் தேவரீரை, இவரும் நம்மால்வெல்லப்படுபவரென்று அவமரியாதையாக நினைத்தமாத்திரத்தால் கண்ணாற்காணப்படும் வடிவைவிட்டு மனதால்ஸ்மரிக்கத்தக்க வடிவையடைந்தான். அதாவது மரித்தான். இங்ஙனம் அவமரியாதையான நினைவே சீக்கிரம் நாசகாரண மானால் அவமரியாதையைச் செய்யினோ தனக்குக்கேடுண்டா மென்பதற்கு யாது சொல்லவேண்டுமென்பது பொருள். ஆண்டு கைமுதிக நியாயங் கூறுகின்றார். யேனைய ஜிதேந்திரியரிடம் (இந்திரிய நிக்கிரக முடையவரிடஞ்) செய்யப்பட்ட அவமரியாதையே தனது கேட்டிற்குக் காரணமெனின் பரமஜிதேந்திரியராயும் பரமேசுவரராயுமுள்ள தேவரீரிடஞ்செய்யப்பட்ட அவமரியாதை தனதுகேட்டை விளைப்பதில் கூறுவதென்னையுளது எ-று.

(அ-கை) பின்னர் உலகத்தை இரக்ஷிக்கச் செய்யப்படும் நடனத்தைக் கூறுபவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

உலகை யோம்ப நடம்புரி கின்றனை யுமது பாதமுதைந்
திட மண்டலங், கிலமு மாசுறு கின்ற தலைந் திடுங் கிரண
வம்புயத் தண்டி லடிபடு, முலவு டுக்கண மாரந்த ரிக்கமு
முறுந்துயர்விரி யேணி படுங்கரைப், பொலம்பு ரந்திதி
போகு மகோபிர புத்து வந்துயருஞ் சிறி தீவதே. (16)

(இ-ள்) இறைவனே! தேவரீர், உலகை யோம்ப - உலகத்தை இரக்ஷிக்கும் பொருட்டு, நடம்புரிகின்றனே-நடனத்தைச் செய்கின்றீர்கள், (அப்போது) உமதுபாதம் - தேவரீர் திருவடி, உதைந்திட - உதைத்தலினால், மண்டலம் - இப்பூமியானது, ஆசு - சீக்கிரம், கிலமுறுகின்றது - துர்ப்பலத்தை யடைகின்றது, அலைந்திடும் - சுழல்கின்ற, அம்புயத்தண்டில் - அழகிய புஜங்களாகிற தண்டாயுதங்களால், அடிபடும் - மோதப்படுகின்ற, கிரணம் உலவு - பிரகாசம் விளங்காநின்ற, உடுக்கணம் ஆர் - நக்ஷத்திரக் கூட்டம் பொருந்திய, அந்தரிக்கமும் - அந்தரிக்ஷ லோகமும், துயர் உறும் - துன்பத்தை யடைகின்றது, விரிவேணிபடும் - கட்டவிழ்ந்த ஜடைகளாற்றாக்கப்படும், கரை - முடிவுடைய, பொலம்புரம் - சுவர்க்க முதலிய தெய்வலோகமும், திதிபோகும் - தனதுநிலைகலங்கு கின்றது, அகோ - ஆச்சரியம், பிரபுத்துவமும் - சிவபெருமானுக்குள்ள சர்வத்திலும் மேலான தன்மையும், சிறிது துயரும் ஈவதே - அற்பதுன்பத்தையுஞ் சீவர்களுக்குண்டாக்குவது எ-று.

(வி-ரை) தேவரீர் கொடுத்தவரத்தால் மாலைக்காலத்தில் அதிகபலத்தையடைந்து அப்போது மூன்றுலகங்களையு மழிக்க எண்ணுகின்ற மஹாராக்ஷசனை அவன் அழிக்காவண்ணம் மயக்கி உலகத்தைப் பரிபாலனஞ் செய்ய நடனத்தைச் செய்கின்றீர். அப்போது தேவரீர் பாதம் மிதித்தலினால் இப்பூலோகம் சீக்கிரம் கஷ்டத்தை யடைகின்றது. நீண்டு அழகாய்ப் பொருத்தமாய்ச் சுழல்கின்ற புஜங்களென்னுந் தண்டாயுதங்களா லடிபடும் நக்ஷத்திரக் கூட்டங்களோடுங் கூடிய அந்தரிக்ஷலோகமும் அழியுமோ வென்று சமுசயிக்கப் படுகின்றது. விசாலமான சுவர்க்கலோகமும் கட்டவிழ்ந்த வேணிகளாற் றாக்கப்பட்டதாய் நிலையற்றதா கின்றது. இந்தக் கிரமத்தால் மூன்றுலகங்களும் துன்புறுகின்றன வெனப் பட்டன. (அ-கை) சர்வஞ்ஞரான பரமேசுவரர் கெடுதியைப்பயக்கவல்ல இங்ஙனமாய தாண்டவத்தைச் செய்யலாகாதெனின் சிவபெருமானுக்குள்ள மேலானமகத்துவம் அனுகூலத்தைச் செய்வதாயினும் அற்பதுன்பத்தையு மவசியஞ் செய்யு மென்று உம் சத்தத்தின் பொருளாகக் கூறினர். அஃதெங்ஙன மெனின் தனது தேசத்

தைக்காக்க சைனியத்தை நடத்திச் செல்லும் இராஜனது தேசத்தில் அச்சைனியம் அற்ப ஹிம்சையையுஞ் செய்கின்றது. அங்ஙனமான மகத்துவத் தோடுங்கூடிய சிவபெருமானிடம் யாது கூற வேண்டுமென்பார் துயருஞ் சிறிதிவதே யென்றார். எ-று.

(அ-கை) பின்னர்க் கங்காதரணத்தை (அணிதலை)ப் பகர்பவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

அந்தர மறைத்துடுக் கணமணிசெய் பேனவழகார்
பெருகும் வாரி யெதுவோர், பிந்துவினு மணுவெனு வைய
நின் சென்னிமிசை பிறழாது காணு மதனாற், சிந்துவலயந்
தரணி யதுதனைத் திபவுருசெய்புமிக் குறியி லேயே சுந்தர
வருட்டி வ்யவுனது வடி வரு மகத் துருவதென வுன்னுவே
மால். (17)

(இ-ள்) ஐய - சுவாமி! அந்தரமறைத்து - ஆகாயத்தைமூடி, உடுக்கணம் - நக்ஷத்திரக் கூட்டங்களால், அணிசெய் - அலங்கரிக்கப்பட்ட, பேனவழகார் - நுரைகளின் அழகு பொருந்திய, யாது - யாதொரு, பெருகும் வாரி - பெரியகங்கை யிருந்ததோ, (அது) நின்சென்னிமிசை-தேவரீர் திருமுடியில், பிந்துவினு மணுவெனு - துளியினும் அணுவாக, பிறழாது - தவறாது, காணும் - காணப்படுகின்றது, அதனால் - அக்கங்கையால், சிந்துவலயம் தரணி அது தனை - சமுத்திரஞ் சூழ்ந்தவிப்பூலோகம், தீப உருச்செய்யும் - எழு தீவுகளோடுங் கூடியதாகச் செய்யப்பட்டது, இக்குறியிலேயே- இவ்வேதுவானே, சுந்தர அருள் திவ்ய உனதுவடிவு - அழகியகிருபையோடுற்ற தெய்வத்தன்மை பொருந்தியதேவரீர் திருவுருவமானது, அருமகத்து உருவது என உன்னுவேமால் - அரிய பெரிய வடிவமென்று நினைக்கின்றோம் எ-று.

(வி-ரை) சர்வ தேவதைகளையும் நியாமகஞ் செய்கின்ற தேவரீர் திருவுருவம் சர்வத்திலும் அதிகப்பெரிய தென்று நிச்சயிக்க இதுவேபோதும் வேறுபிரமாணம் வேண்டாமென்பார் "இக்குறியிலேயே" யெனத்தேற்றே காரத்தாற் கூறினார். "அந்தர" மென்பன முதலியவற்றால் அவ்விசேஷணங்களையேக் கூறுகின்

ரூர். ஆகாயமுழுவதும் வியாபித்து வெண்மை முதலியகுணங்களால் சசாதீயமா (சமான இனமுடைய தா)னதால் தனக்குள் மூழ்கிக்கிடக்கின்ற நக்ஷத்திரக்கூட்டங் களால் நுரைபோன்று அழகைச்செய்யப்பட்டு இருக்கின்ற ஜலப்பிரவாகமானது அணுவினும் அணுவாகக் காணப்பட்டது "அகஸ்தியரா லெழுகடலுங் குடிக்கப்பட்டபின் பகீரதன் கொண்டுவந்த கங்காப் பிரவாகத்தால் அக்கடல்கள் நிறம்பின வென்பது புராணப்பிரசித்தம்" ஆகலின் அக்கங்காப் பிரவாகத்தால் இப்பூலோகம் ஜம்புதிவு முதலிய எழுதீவுகளாக்கப்பட்டது. இதனால் துளியினுந் துளியாக சிவபெருமான் திருமுடியிற் காணப்பட்ட ஜலாம்சம் ஓரம்சத்தால் மந்தாகினி யென்னும் பெயருடையதாய் சுவர்க்கலோகத்தில் வியாபித்து ஆகாயகங்கையாகவும், ஓரம்சத்தால் பூலோகத்தில் பாகீரதி யென்றும் கங்கையென்றும் பிரசித்தமாய் எழுசமுத்திரங்களைப் பூரித்தும், ஓரம்சத்தால் பாதாளவுலகில் வியாபித்து போகவதியென்றும் இருக்கின்றது என்பதாம். இதனால் தேவரீர் சரீரம் மிகமகத்துவ முடையது எ-று.

(அ-கை) பின்னர் திரிபுரதகனத்தைக் கூறுபவராய்ப்பரமேசுவரனைத் துதிக்கின்றூர்.

பூமி சயந்தன நான்முக னுந்துவன் பூதர விந்திரன்
வேணுமா, னேமி யதிந்தொடு மாயிர மஞ்சுடர் நேமி
யுறுங்கர னேர்கோலாம், பாமர ரின்புர மோர்திர ணந்தகி
பாலக சம்ப்ரம மீதேனோ, சாமி தொழும்பரோ டாடிடு
புந்தியுஞ் சார்பர தந்திர மாகாதே. (18)

(இ-ள்) ஈசனே! பாமரரின்புரம் - அவிவேகரது முப்புரங்களை, ஓர்திரணந்தகிபால - ஒரு துரும்பாயெரிக்கும் இயல்புடைய தேவரீர், பூமி - பிருதிவியை, சயந்தனம் - இரதமாகவும், நான்முகன் - பிரம்மாவை, உந்துவன் - சாரதியாகவும், பூதர இந்திரன்- மகாமேருபருவதத்தை, வேணும் - வில்லாகவும், இந்தொடுஆயிரம் அம்சுடர் - அமிர்தகிரண முடைய சந்திரனோடு சகஸ்திரகிரண முடைய சூரியனையும், நேமியது - தேர்ச்சக்கரங்களாகவும், நேமியுறுங்கரன் - சுதரிசன மென்னுஞ் சக்கரத்தைக் கரத்திற்கொண்ட

விஷ்ணுமூர்த்தியை, நேர்கோலாம் - நேரானபாணமாகவும், கொள்ளும் ஈதுசம்ப்ரமம் - கொள்ளுகின்ற இவ்வாடம்பரம், ஏன் - தேவரீருக்கு எற்றிற்கு, வேண்டா மென்றபடி. தொழும்பரோடு- வேலைக்காரர்களோடு, ஆடிடும்-விளையாடுகின்ற, சுவாமிபுந்தி - எஜமானனது மனம், சார்பரதந்திரமாகாது - பொருத்திய அன்னியர் வசமாகாது, ஆனுற் சுதந்திர முடையதேயாம் எ-று.

(வி-ரை) பாமரரின் புரங்களைத் திரணம்போல் இச்சைமாத்திரத்தாற்றகிக்க இச்சிக்குந் தேவரீர் நகத்தைவெட்ட கோடரியைக் கொள்வதைப்போல் பிருதிவியை இரதமாகவும், பிரம்மாவை சாரதியாகவும், மேருவை கோதண்டமாகவும், சந்திரசூரியர்களை இரண்டுசக்கரங்களாகவும், விஷ்ணுவை பாணமாகவும், கொண்ட சாதனங்கள் உசிதமன்றென்பார் "ஈதுசம்ப்ரமம் ஏன்" என்றார். இங்ஙனமாக்ஷேபித்து விளையாட்டில் பிரயோஜனத்தை யபேக்ஷிக்காமல் விசித்திரமான வஸ்துக்களை தனதுவயமான விளையாட்டுச் சாதனங்களாக்கி விளையாடுபவரும், சர்வகாரியங்களையுந் தனது இச்சைமாத்திரத்தாற் செய்ய சக்தியுடையவரும், வைதிக லௌகீக நியமங்களின் வயமாகாத புத்தியையுடையவரும் ஆகிய தேவரீருக்கு அற்பமேனு மனுசிதமன்று என்பார் "சாமிதொழும்பரொடாடிடு புந்தியும் சார் பரதந்திரமாகாதே" என்றார். இதனு லதைப் பரிகரித்தார் எ - று.

(அ-கை) பின்னர் விஷ்ணுவின் பக்தியையும் அதன்பலத்தையுங் கூறுபவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

ஆயிரங் கமலமல ராகுமம் பலிகொடுன தார்கழற் கன்புசெயவோ, ரேயுமொண் கமலமலர் சோர்வுறும் படியருள வேகதன் மரைவிழியையீ, நேயதுங் கமெனுமது நேமிவண் வடிவுகொடு நீடுதிண் புவன மிதினோர், தூயவின் றிதிபுரிய மாநயுங் கவனமது தோமரொண் புரமதனனே. (19)

(இ-ள்) தோமரொண்புர மதனனே - குற்றமுடைய முப்புரவாசிகளின் ஒள்ளியபுரங்களை யெரித்த விறைவனே! ஆயிரங் கமலமலராகும் அம்பலிகொடு-(விஷ்ணு மூர்த்தி) ஆயிரமென்னும்

எண்ணிக்கையுடைய தாமரைமலர்களாகிய பூஜா திரவியங்களைக் கொண்டு, உனது ஆர் கழற்கு அன்பு செய-பொருந்திய தேவரீரது திருவடிகளுக்கு பக்தியோடு மருச்சிக்கும்போது, ஒண் ஏயும் ஓர் கமலமலர் சோர்வுறும் படியருள - அழகுடைய வொரு தாமரைப் பூவை (பக்தியைப் பரீக்ஷிக்கும் பொருட்டு நீர்) மறைத்தருள (அப் போது), தன்மறை ஏகவிழியை ஈ-தாமரைப்பூவை யொத்ததனது ஒரு விழியை(நியமத்தின் கேடுண்டாக லாகாதென்று) அர்ப்பித்த, துங்கமெனும் அதுநேய - உயர்ந்த அப்பக்தியானது, நீடுதிண்பு வனமிதில் - விரிந்து நீண்டதிண்ணிய யிவ்வுலகில், வண்நேமி வடிவுகொடு - வளப்பமுடைய சக்கரவடிவத்தை யடைந்து, நேர் தூய இன்திதிபுரிய - பொருந்திய பரிசுத்தமான இனிமையாகிய இரக்ஷிப்புத்தொழிலைச் செய்வதற்கு, மாநறுங்கவனமது-பெருமை யுடைய நல்லவிழிப்பை யுடையதாக விருக்கின்றது எ-று.

(வி - ரை) விஷ்ணுமூர்த்தியானவர் தேவரீர் திருவடி களுக்கு ஆயிரந் தாமரைமலர்களைப் பூஜாதிரவியமாகக் கொண்டு அருச்சனை செய்யும்போது அவரது பக்தியைப் பரீக்ஷிக்கும் பொருட்டு அதில் ஒருமலரைத் தேவரீர் மறைக்க அப்போது அருச் சனநியமத்திற்குக் கேடுண்டாகக் கூடாதென்று வேறுதாமரை மலர் அகப்படாமையால் தனதுநேத்திரமான தாமரைமலரைப் பிடுங்கினர். அப்படி தனதுநேத்திரத்தைத்தானே பிடுங்கியருச் சித்த பக்தியின்முதிர்ச்சியே சுதரிசனமென்னுஞ் சக்கரவடிவாய்த் திரிந்து மூன்றுலகங்களையும் பரிபாலனஞ்செய்ய சாவதானமாய் நிலைத்திருக்கின்றது என்னுமிக்கதை புராணப்பிரசித்தமாம். இங் ஙனம் மனதிற்ககோசரமான மகாத்துமியமுடையவர் தேவரீர்எ-று.

(அ-கை) இங்ஙன மூற் செய்யுட்களாற் பரமேசுவர ஆராத னத்தினனேயே சர்வபுருஷார்த்தப் பிராப்தியாமென்று அன்வய வியதிரேகங்களாற் பிரதிபாதிக்கப்பட்டது. ஆண்டு மீமாம்சகரென நினைக்குஞ்சிலர் பரமேசுவரனை அவாவாத கருமானுஷ்டானத்தா லுண்டான அபூர்வத்தானேயே சுபாசுபங்களுண்டாமெனக் கூறு கின்றனர். அவர்களைக் கண்டிப்பவராய்ப் பரமேசுவரனைத் துதிக் கின்றார்.

யாகங்க ளுறங்கினு நீபலனை யாகர்க்கருள் வான்கொ ளுறங்குகிலா, யேகன்றனை யாதரி யாதழியு மேலுங்கரு மம்பயன் யாண்டுதரும், பாகுன்றனை யாக பலந்தரவே பாடுங்குறி யாயுனி வேதமதி, லாகும்பெரு நேய மடைந் துலகே யாரம்ப மறைத்தொழி லிற்செயுமே. (20)

(இ-ள்) யாகங்கள் உறங்கினும் - செய்யப்பட்டயாகமுதலிய கிரியைகள் அழிந்தனவாயினும், பலனையாகர்க்குஅருள்வான் - அந் தயாகாதிபலன்களை யாகமுதலியவற்றைச் செய்தவர்களுக்குக் கொ டுக்கும் பொருட்டு, நீஉறங்குகிலாய் - தேவரீர் விழிப்புடையவரா யிருக்கின்றீர், (ஆகையால்) ஏகன்றனை ஆதரியாது அழியும் - ஏக னை சிவபெருமானை விசுவசிக்காமலனுஷ்டித் தழிக்கப்பட்ட, ஏலுங்கருமம் - பொருந்திய யாகாதிகருமம், யாண்டு பயன்தரும் பாகு - எங்ஙனம் பலனைக்கொடுக்கு மியல்புடையது, இல்லையென் றபடி. உலகு - உலகிலுள்ளார், யாகபலந்தர - யாகாதிகளின் பல னைக்கொடுக்க, பாடும் - பிரதிபாதிக்கப்படும், குறியாய் - அடையா ளமாய், உன்றனையுனி - தேவரீரைக்கருதி, வேதமதில் பெருநேய மடைந்து - வேதத்தில் மிக்கசிரத்தையைவைத்து, மறைத்தொழி லில் - வேதப்பிரதிபாத்தியமான யாகாதிகளில், ஆரம்பம் செயும் - முயற்ச்சியைச் செய்யாநிற்பர் எ - று.

(வி-ரை) யாகாதிகருமங்கள் சீக்கிரம் அழியுமியல்புடமை யால் தமது காரணவடிவத்தில் லயமடையினும் யாகாதிகருமங்களை யனுஷ்டித்தவர்களுக்குக் காலாந்தரத்திலுந் தேசாந்தரத்திலு முண் டாகும் அந்தந்த பல சம்பந்தத்தின் பொருட்டுத் தேவரீர் விழித் துக்கொண்டிருக்கின்றீர். ககரமுதலிய ஏவல்விகுதியையுடையபதங் களின் வாச்சியமான கிரியைகள் சுவர்க்காதிகளுக்குச் சாதனமா தல் வேறுவிதமாய்ப் பொருந்தாமையால், கற்பிக்கப்படும் அதிர்ஷ் டமே பலத்தைக்கொடுக்க விழித்துக்கொண்டிருக்கின்றது, ஈசுவர னால் யாதுபயன் எனின் சேதனவடிவபுருஷனை யனுசரிக்காது அழிந்த தொழில்வடிவகருமம் யாண்டு பலனைக்கொடுக்கின்றது என்றுகூறினர். யாண்டு மின்றென்பது பொருள்.

"லோக வேதாதிகரண நியாயத்தால்" வேதத்திற் செய்யப் படுங்கற்பனையும் உலகத்தை யனுசரித்ததாம் எங்ஙனமெனின் ஆரா திக்கப்பட்ட ராஜாமுதலியசேதனபுருஷர்களின் அபேக்ஷையின்றிய சேவைமுதலியகருமம் பலனைக்கொடுக்கிறதில்லை. இங்ஙனம் உல கிற்கண்டவண்ணமே வைதிககருமமும் பலனையுண்டாக்கப் போதி யதாகும்போது உலகஅனுபவத்திற்கு விரோதமாய்ப் பயனை அளிப் பதாக அபூர்வத்தைக்கற் பிக்க அவகாசமேயின்று. அபூர்வத்தைக் கொள்ளின் அது உலகசித்த காரணாந்தர (வேறுகாரணத்தின்) அபே க்ஷையில்லாமல் சுவர்க்காதிபலனை யுண்டாக்குகின்றதா ? அல்லது அதனை யபேக்ஷித்து உண்டாக்குகின்றதா? முதற்பக்ஷமெனின் அந் தப்பலனை யனுபவிக்க யோக்கியமான தேகேந்திரியாதிகளின் அபேக்ஷையும் வேண்டாததாகும்;இஃதிஷ்டமன்று, சகலரும் சரீரத் தோடுற்ற ஆத்மமன சம்பந்தமுதலிய திருஷ்டகாரணத்தாற் சுக துக்காதிகளுண்டாமென்று அங்கீகரித்தலின். இரண்டாவது பக்ஷமெனின், உலகசித்தமான தேகேந்திரியாதிகளின் அபேக்ஷை யைப்போன்று ஈசுவரனபேக்ஷையும் நியமமாய் வேண்டும், உல கத்தி லங்ஙனங் காணப்படுகின்றமையின். ஆகையால் சுருதிநியாய சித்தமான ஈசுவரபதார்த்தமான தருமியின் பாதகற்பனையினும் அபேக்ஷிக்கப்படாத அபூர்வமான தருமத்தின் பாதகற்பனையே சிரேஷ்டமாம் "ஆகையாற் பலம் பொருந்துதலினின்றும்" என்னு நியாய (சூத்திர)த்தினால், அபூர்வத்தை அங்கீகரித்து அது ஈசுவர னுக்கு அபேக்ஷயா(சககாரியா)னதாய்ப் பிரதிபாதிக்கப்பட்டது. உண்மையினோ அபூர்வத்தினிருப்பில் அற்பப்பிரமாணமுமின்று, ககாரமுதலியவிகுதிகள் இஷ்டத்தினடைவின் சாதனத்தைக்கூறும் வாசகங்களாதலின். அவை வேறுவழியாகப் பொருந்தாமையான் ஆயிரஞ் சுருதிநியாயங்களாற் சித்தமான பரமேசுவரனை(இறைவனி ருப்பா)லே சாந்தியை யடைகின்றனவாகையால், அபூர்வத்தின் சித் தியாகாது. அபூர்வமும் அதன் பலனைக்கொடுக்குந் தன்மையும் ஆகவிரண்டையு நீங்கள் கற்பிக்கவேண்டும்; யாங்களெனினோ ஈசு வரனைமாத்திரங் கற்பிக்கவேண்டும். அவருக்குப் பலனைக்கொடுக் குந் தன்மையெனினோ சேதனத்தன்மையால் அரசர் முதலியோர்

போன்று லோகசித்தமேயாகும். சர்வக்ஞத்தன்மையாலும், அந்த ந்தக் கிரியானுசாரமாகப் பலனைக்கொடுக்குந் தன்மையாலும், வைஷம்யம் கருணையின்மை முதலிய தோஷப்பிரசங்கமின்று. எதனாலிங்ஙனம் நீரே சர்வகர்ம்ம பலதாதாவோ அதனாற் காலாந்தரத்திற் பலன் கொடுக்கும் ஸ்ரௌத ஸ்மார்த்த (சுருதி ஸ்மிருதி சம்பந்தமான யாகாதி) கருமங்களின் பலனைக்கொடுக்க ஈடுபட்டவராக சுருதி ஸ்மிருதி நியாயங்களினால் தேவரீரை நன்றாக நிச்சயித்து; அதாவது கருமத்தின் பலனைக்கொடுக்கும் உனதிருப்பைப் பிரதிபாதிக்கும் "ஹே! கார்க்கி இவ்வக்ஷரத்தினாணையினால் சுவர்க்க லோகமும் பூலோகமும் அசையாமல் நிலைபெறுத்தப்பட்டன" "ஹே! கார்க்கி இவ்வக்ஷரத்தினாணையினால் கொடுக்கின்ற மனிதர்களையும் நிலைபெறுத்தப்பட்ட தேவர்களான பிதிரர்கள் யாககருத்தாவையும் தருவி (அகப்பை) யையும் துதிக்கின்றார்கள்" "கருமத்தைக்காண்போன் எல்லா பூதங்களிலும் வாசஞ்செய்பவன்" "இவனே நல்லகருமத்தைச்செய்துவைக்கின்றான் இவனே கெட்ட கருமத்தைச் செய்துவைக்கின்றான் எவன் அவனைப்பிரேரிப்பான்" என்னு மிவைமுதலிய சுருதிகளில் சிரத்தையைவைத்து இவை அருத்தவாத சுருதிகளாதலின் தமது பொருளில் பிரமாணமில்லாதன வென்றுண்டாமருத்தவாத சங்கையை நீக்குதலினாலும், உலகத்தில் சித்தித்த மிகத்திடமான நியாயத்தின் வலுவாலும்,தேவதாதிகரணநியாயத்தினாலும் தமதுபொருளில் பிராமாண் யத்தை நிச்சயித்து;சுருதிஸ்மிருதிகளால் விதிக்கப்பட்டகருமாதிகாரிகளான ஜனங்கள் ஸ்ரௌதஸ்மார்த்த கருமங்களில் முயர்ச்சிக்கின்றார்கள். என்னும் இப்பொருள் "பாடுங்குறியாயுனி" என்பதால் சொல்லக்கருதியதாம்.எங்ஙனம்வியவகாரத்தில் சமர்த்தனான கடன்கொடுப்பவனொருவன் பிரமாணத்தால் நிச்சயிக்கப்பட்டதும் தீர்க்ககாலமிருப்பதும் தனது தனத்தைக்கொடுக்குஞ் சக்தியுடையதுமான பூமி முதலிய பொருள்களில் ஒன்றைக்குறித்து, கடன்வாங்கினவன் இறந்தானாயினும் ஓடினானாயினும் அந்தபூமி முதலியதினின்றும் தனதுதனத்தை அடைவேனென்னு மெண்ணத்தால் யாரோவொருவனுக்குக் கடன் கொடுக்கின்றான். அஃதொப்பக் கடன்காரனையொத்த கருமங்கள்

அழிவுறினும் பூமிமுதலியதையொத்த பரமேசுவரனிடத்திலிருந்தே அதன்பலனே அடைவேனென்னு மபிப்பிராயத்தால் கடன் கொடுப்பவனைப்போன்ற யாகத்தின் அதிகாரி சந்தேகமின்றியே கருமத்தையனுஷ்டிக்கின்றனன் எ - று.

(அ-கை) இங்ஙன மீசுரானுக்கிரகத்தால் யாகபலனைக்கூறி விகித(விதித்த)கருமங்களுக்குச் சுபபலத்தை யுண்டாக்குதல் பொருந்தாமையால் தருமமென்னும் ஆபூர்வம் காரணவடிவ மாகக் கற்பிக்கத்தக்கது என்னும் பக்ஷந் கண்டிக்கப்பட்டது. இப்போது விதித்ததைச் செய்யாமையாலும் விலக்கியதைச் செய்தலாலும் கெட்ட பலம் பரமேசுவரானுக்கிரகத்தாலுண்டாகாமையால் அதன்பொருட்டவசியம் தருமமென்னு மபூர்வத்தைக் கற்பிக்கவேண்டு மென்னுஞ் சங்கைவரின் இராஜாவின் ஆக்ஞையைக் கடத்தலினுற்போல் பரமேசுவராக்ஞையை யுல்லங்கனஞ்செய்தலினுல் சர்வானர்த்தபலமும் திருஷ்ட (பிரத்தியக்ஷ) வாயிலாகவே யுண்டாகுமென்னு மபிப்பிராயத்தால் சிவபெருமானது அனுக்கிரகமின்மையால் யாக பலத்தி னடைவின்மையையும் அனர்த்தபலத்தினடைவையும் பிரதிபாதிப்பவராய் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

கிரியையில் வலவன் பிரசைகட் கதிபன் கிருதுவின் பதிதக்க னவையோர், சுரரிரு டியரு மகம்புரி பவராய்த் துலங்கியுங் கிருதுவின் பயனைத், தருவதில் விசன னெனு முனின் மகத்தைத் தவிர்ந்தனன் சரணமே தருவோய், துருவலிற் சிரத்தை யிலதுசெய் மகமுந் துயரையே தருந்து டங் குவர்க்கே. (21)

(இ-ள்) சரணமேதருவோய் - அனைவருக்கும் புகலிடமான இறைவனே! கிரியையில் - யாகமுதலிய கருமங்களின் அனுஷ்டானத்தில், வலவன் - வல்லுனனுன, தக்கன் பிரஜைகட் கதிபன் - தக்ஷனென்னும் நாமத்தையுடைய பிரஜாபதி, கிருதுவின்பதி - யாகத்தின் அதிபதி யாகவும், அவையோர்சுரர் - அந்தயாகசபையினர் தேவர்களாகவும், இருடியர் மகம்புரிபவராய் - இருஷிகளே யாகத்தைச் செய்கின்றவர்களாகவும், துலங்கியும் - அந்தயாகம்

பொலிவுற்றும், கிருதுவின்பயனைத்தருவதில் - யாகத்தின்பலனைக் கொடுப்பதில், வியசனனெனும் உனின் - எப்போதுஞ் சிந்தை யையுடைய தேவரீரானேயே, ம க த் தை த் தவிர்ந்தனன் - அந்தயாகபலனை தக்ஷப்பிரஜாபதி இழந்தான்; (அதனால்) நின்சிரத்தை இலது செய்மகமும் - தேவரீரிடத்தன்பின்றிச்செய்யப்படும் யாகமும், துடங்குவர்க்கு - செய்கின்றகருத்தாவிற்கு, துருவம் - நிச்சயமாய், துயரையேதரும்-துன்பத்தையேக் கொடுக்கும் எ-று.

(வி-ரை) கிரியையில் வல்லவன் என்றதாலும் பிரஜைகட்கதிபன் என்றதாலும் அதிகாரியின் வித்வத்தன்மையும் சாமர்த்தியமுங் கூறப்பட்டன. இங்ஙனமானவன் யாகத்தின் அதிபதியாகவும் திரிகாலதரிசிகளான பிருகு முதலிய ரிஷிகள் யாகத்தைச் செய்பவரான அத்வர்யுக்களாகவும்,பிரம்மா முதலிய தேவக்கூட்டங்கள் அச்சபையில் உபதிருஷ்டாக்களாகவும் இருந்தனர். இங்ஙனஞ் சர்வசாமக்கிரியும் பொருந்தியதாயினும், தேவரீரும் யாகபலனை சுவர்க்காதியைக் கொடுப்பதில் சிந்தையை யுடையவராயினும் உன்னை அவமரியாதை செய்ததினால் அந்த யாகம் உமக்கு சந்தோஷமின்மையினால் அழியுங்காரணமுடையதாயிற்றென்பது பொருள். இதனையேத் திடஞ்செய்ய யாகத்தின் பலனைக் கொடுக்கும் பரமேசுவரனிடத்தில் பக்தியில்லாமல் அனுஷ்டிக்கப்பட்ட யாகாதிகள் செய்கின்ற எஜமானனின் நாசத்தின் பொருட்டேயாகின்றன என்றுங் கூறினர் எ - று.

(அ-கை) பின்னர் மான்வடிவையடைந்த பிரம்மாவின் வதையைப் பிரதிபாதிப்பவாரய்ச் சிவபெருமானைத் துதிக்கின்றார்.

நாத வவமதியி னுழைய தாகியத னொடு சிறுமியினை
மனுருவி னுலிரமி, காத லொடுவலுவி னுலடையு காமு
கனுங் காது கணையினொடு கூடுமுட லானவனும், பீதியுடை
யவனும் வானுலகி லேயுநிலைபேணி யடைபவனு மாகுமல
ரோனிவனை, மாது தனுகரனின் வேடமகிழ் வானவது
மாறி யொருபொழுது மேவிடுவ தேயிலதே. (22)

(இ-ள்) நாத - நியமனஞ் செய்பவரே ! மாதுதனுகர-செல்வத்திற்கிடனாய மேருவை வில்லாகக் கரத்திற் கொண்டவரே! அவமதி

யினால்-வெட்கத்தால், உழையதாகிய-மான்வடிவையடைந்த, தன் - தனது, நாடு - பார்வைக்கினிமையான, சிறுமியினை - புத்திரியை, மானுருவினால் - மான்வடிவையடைந்து, ரமிகாதலொடு - இரமிக்க வேண்டுமென்ற இச்சையோடு, வலுவினாலடையும்-பலாத்காரமாக அடையும், காமுகனும் - காமவிகாரத்தோடுங் கூடியவனும், காது கணையினொடு - வருத்து கின்ற ஸ்ரீருத்தபாணத்தோடு, கூடுமுடலானவனும் - பொருந்திய சரீரத்தையுடையவனும், வானுலகில் - ஆகாயத்தில், ஏயும்நிலை பேணி அடைபவனும் - பொருந்திய இருப்பிடத்தைவிரும்பியிருப்பவனும், ஆகும்-(தேவரீரது பாணந் துறத்துதற்கு இங்ஙனம்) ஆயிருக்கின்றவனேனும், மலரோனிவனை-இப்பிரம்மதேவனை, நின்வேடமகிழ்வானது - வேடன் சந்தோஷமான தேவரீரது பாணவேகமானது, மாறி - மீண்டும், ஒருபொழுதும் - இக்காலத்திலுங்கூட, விடுவதேயிலது - விட்டு நீங்காமல் துடர்ந்தே நிற்கின்றது எ று.

(வி-ரை) தேவரீரது பினாகத்தினின்றும் விடப்பட்ட சரமானது ஆர்த்ரா நக்ஷத்திர வடிவமாய்ப் பரிணமத்தை யடைந்து சுவர்க்கத்தின் நட்சத்திரங்களின் மத்தியில் மிருகசிரூபமாய்ப் பரிணமத்தை யடைந்த பிரம்மாவிற்கு துன்பத்தையுண்டாக்கி அதனாற் பயத்தையுடையவராயினும் இன்றும் அவரை விடுவதின்றித் தொடர்ந்தே நிற்கின்றது என்பதாம். இன்றும் தேவரீரைப் பினாகபாணியாகக் காட்டுகின்றது என்பது பொருள். அவரிங்ஙனந் தண்டிக்கத்தக்கவரென்பதை, தனது பிதாபதியாக வருகின்றார் என்ற வெட்கத்தால் மான் வடிவையடைந்த தனது புத்திரியைக் கண்டு இவள் வெட்கத்தால் மானானள் நாமும் மான் வடிவால் இரமிப்போமென்னும் புத்தியையுடையவராய் பிரம்மா மிருகரூபமாய் ஆசையின்றிய தனது புத்திரியை அடைந்தார் என்றதாற் கூறினார். ஜிதேந்திரியருள் மிக்கவராயினும் தனது மரியாதையைக் கடத்தலிற் காரணங் கூறுகின்றார் ; காமுகன் என்று. காமத்தில் மூழ்கினவராதலின் தனது மரியாதையைத் தாண்டினாரென்பது பொருள் " பிரம்மா அதிக ரூபவதியான தனது மகளைச் சந்தியாகாலத்திற் பார்த்து காமவசனாய் அவளைக் கிரகிக்க முயர்ச்சித்தார். அவளும்

இவர் பிதாவாகவிருந்தும் என்னைத் தொடர்கின்றா ரென்னும் வெட்கத்தால் பெண்மான் வடிவானள். பின்னர் பிரம்மாவும் ஆண் மான் வடிவானர். அதனை ஸ்ரீ மகாதேவர் பார்த்து மூன்றுலகங்களையு நியாமகஞ் செய்யு நம்மால், இப்பிரஜாநாதர் தருமத்தை யபிவிருத்திச்செய்பவராகவிருந்தும் இங்ஙனமாய வெட்க காரியத்தை அனுசரிக்கின்றாராகையால் இது பெரிய அபராதமாதலின் நம்மாற் றண்டிக்கத் தக்கவரென்று பினாகத்தை யெடுத்துப் பாணத்தை விட்டார். அதனா லப்பிரம்மா பீடிக்கப்பட்டவராய் மிருகசிர நக்ஷத்திர வடிவானர். அதனால் ஸ்ரீ ருத்திரசரமும் ஆர்த்ரா நக்ஷத்திரமாய் அவரது பின்பாகத்தில் நிற்கின்றது. அதனால் ஆர்த்ராமிருகசிரங்களுக்கு இன்றும் சம்பந்த மிருத்தலின் என்றும் விடுகிறதில்லை" என்பது புராணப் பிரசித்தம் எ - று.

(அ-கை) ஸ்ரீ மகாதேவர் மேலான ஜிதேந்திரியருள் முதன்மையரேனும் பார்வதிபால் வைத்த கருணையால் நாரிய ராசையரைப்போல் காணப்படுகின்றாரென்று பிரதிபாதிப்பவராய் ஸ்ரீ மகாதேவரைத் துதிக்கின்றார்.

தனதாரழ காதர வால்வளைமா தனுமேவலர் பாணனை
யோரறுகாய், முனமேயெரி சேர்தர வாசு செயன் முதனா
யகி காணியு மேனியையே, தனுபாதிய தீதலி னரியரா
சையனேயென நாடிடி லோவரதா, வுனலார்புர நாசக
யோகமுளா யுளதாமிள நாரியர் மோகரகோ. (23)

(இ-ள்) வரதா - வள்ளலே! உனலார்புரநாசக - பகைவாது முப்புரங்களை யழித்தவரே! யோகமுளாய் - யோகமுடையவரே! தனது - பார்வதியாரது, ஆர் அழகு ஆதரவால்-பொருந்திய அழகை ஆதரவாக வைத்துக்கொண்டு, வளை - வளைத்த, தனுமேவு - வில்லில் பொருந்திய, அலர் பாணனை - புஷ்ப பாணங்களையுடைய மன்மதனை, ஓர் அறுகாய் - ஒரு துரும்பாக, முனமே - பார்வதி தேவியின் முன்னிலையிலேயே, ஆசு — சீக்கிரம், எரிசேர்தர - அக்கினிப்பொருந்தும்படி, செயல் - தேவரீர் செய்தருளியதனை, முதல் நாயகி - ஆதி உமையானவள், காணியும் - பார்த்திருந்தும், தனு

பாதியது - தன்னிடத்துள்ள இரக்கத்தினால் பாதியுடம்பை, ஈத லினால் - தேவரீர் பார்வதிக்குக் கொடுத்தருளியதனால், நினையே - தேவரீரை, நாரியர் ஆசையன் என நாடிடில் - பரமேசுவரன் ஸ்திரி ஆசையுடையவரென்று அம்பிகை நினைத்தால், உளதாம் - அது உண்மையேயாகும் (ஏனெனின்) இளநாரியர் மோகரகோ - யுவதிப்பருவத்தினை யுடைய நாரியர்கள் மோகமுடையவர்களாதலின் இது ஆச்சரியமேயாகும் எ - று.

(வி-ரை) உன்னலாரென்பதும் முன்னமேயென்பதும் உனலார் முனமே என இடைக்குறையாக நின்றன. துர்லபமான பாதி சரீரத்தைக் கொடுத்ததினால் வரதனே என்ற விளிமிகப் பொருத்தமானது. யோகமுளாயென்றதால் ஜிதேந்திரியத்தன்மை கூறப்பட்டது. மன்மதனை தேவரீர் நேரில் கண்டதும் திரணம்போல் சீக்கிரம் எரித்தீர். எப்படிப்பட்ட மன்மதனையெனின் பரமயோகியேனும் ஸ்ரீ ருத்திரரை பார்வதி தேவியின் சவுந்தரிய முதலிய குணங்களால் நமது வசமாக்கி விடுவோமென்று அவ்வழகாகிய நிமித்தத்தால் வில்லைக் கையிலேந்தியவனை யென்றார். இதனால் தனது சவுந்தரியாதி விசேஷமும் ஸ்ரீ ருத்திரரிடம் அர்ப்பமாய்விட்டது எனப்பட்டது. இங்ஙனந் தனது அழகு பயன்படாமையையும், மன்மதன் துரும்புபோல் எரிக்கப்பட்டமையையும், பார்வதிதானே நேரில் பார்த்தும், பார்வதி வெகுகாலம் நம்மை நோக்கித் தபசைச் செய்தாள், அதனால் விரகதுக்கம் அடையவேண்டா மென்று கருணைமாத்திரத்தால் தனது உடம்பின் பாதியில் நிலைபெறுத்திய காரணமான மயக்கவேதுவால், சர்வ யோகியரின் முதன்மையரான தேவரீரை என்வசமின்றாயின் என்னை எங்ஙனம் பாதியுடம்பிற் றாங்குவர் என மயக்கால் நாரியராசை யுடையவரென விசேஷந் தெரியாமல் அறிவாளேயானால், அது அவளுக்குப் பொருத்தமேயாம் என்பார் "இளநாரியர் மோகரகோ" என்றார். யுவதிகளின் உடன்பிறந்த பூஷ (ஆபர)ணம் பலவற்றுள்ளும் மூடத்தனம் பிரதானமாதலின், பார்வதியும் இயல்பாக சேதன வடிவானாலும் யுவதியாதலின் மித்தையாவுணர்வும் உடையவ ளென்றது பொருத்தமானதே எ - று.

(அ-கை) பின்னர் நீர் அமங்கல வொழுக்கமுடையவராய் விளையாடினும் பக்தர்களுக்கு மங்கலத்தையேக் கொடுக்கின்றாய் என்று பிரதிபாதிப்பவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

**சுடலை யின்னட னஞ்சுழல் பேயொடே சுற்றல் வெஞ் சுடலைப்பொடி பூசுதல், படலை யின்னரர் வெண்டலை யின்றி ரள் பகரு மிவ்வகை நின்றன் குணமெலா, மடம தன்றனைக் கொன்ற வரதனே மங்கலம் மல வாகுக வாயினுந், திடம தாகநி னைநினை யன்பரின் சிந்தையிற் பர மங்கல மாதி யால். (24)**

(இ-ள்) மட மதன்றனைக் கொன்ற வரதனே - அறிவிலியாகிய மன்மதனை யெரித்த வள்ளலே! நடனம் - தேவரீர் நடநஞ் செய்வது, சுடலையில் - சுடுகாட்டில், சுற்றல்-சஞ்சாரஞ் செய்வது, சுழல்பேயொடே - சுழன்று திரிகின்ற பேய்க்கணங்களோடு, பூசுதல் - உத்தூளனஞ் செய்வது, சுடலைப்பொடி - மனிதரைக் கொளுத்திய சுடுகாட்டுச் சாம்பர், படலை - மாலை, இன்நரர் - இனிமையான மனிதரின், வெண்டலையின்திரள் - வெள்ளிய சிரங்களின் வரிசை (என்று), இவ்வகை பகரும் - இங்ஙனம் பிரதிபாதிக்கப் படும், நின்றன்குணமெலாம் - தேவரீர் ஆசாரமனைத்தும், மங்கலம் அல ஆயினும் ஆகுக-அமங்கல வடிவமாயினும் ஆகுக, திடமதாக - அசஞ்சலமாய், நினைநினை அன்பரின் - தேவரீரைத் தியானம் பண்ணும் பக்தர்களது, சிந்தையில் - மனதில், பரமங்கலமாதியால் - மேலான மங்கலவடிவாய் விளங்குகின்றீர் எ - று.

நின்னையென்பது நினையெனக் குறுகியது.

(வி-ரை) தேவரீரது சர்வவொழுக்கமும் மங்கலத்திற்கு விபரீதமாயினும் எங்களுக்கு அதனால் பயனில்லை யென்பார் மங்கல மல வாகுகவென்றார். அங்ஙனமேனும் நீர் இயல்பாய் அமங்கலத்தை அனுசரிப்பினும் உம்மைத் தியானஞ் செய்கின்றவர்களுக்கு முடிவற்ற மங்கல வடிவாயிருக்கின்றாய் என்றதால், அமங்கலவொழுக்கரான இந்த ருத்திரர் மங்கல விருப்பினரால் சேவிக்கத் தக்கவரன்று என்னும் மயக்கத்தை நீக்கி மன வாக்குக் காயங்களால் எல்

லோராலும் என்றுஞ் சேவிக்கத்தக்கவரென்று கூறப்பட்டது. உம்மையால் ஈரத்தோடுங்கூடிய தோலாடை முதலியனவுங் கொள்கஎ - று.

(அ-கை) "மதியினொடு மொழியின்" என்ற 2-வது செய்யுளில் "விதமெவ்வளவு குணமுள" என்ற இதனுல் சகுண ஐசுவரியமும், "எதனது விடயம்" என்ற இதனுல் அத்விதிய பிரம்ம சொரூபமும், "நவவடிவில்" என்ற இதனுல் லீலாவிக்ரகத்தின் ஆடல் முதலியனவுமாகிய மூன்று பதார்த்தங் கூறப்பட்டன. ஆண்டு 6-வது செய்யுளில் "சாவயவமாயுஞ் சகங்கட்கு" என்றதனுல் சாமான்யமாய்ப் பரமேசுவரனது உண்மையைத் திடஞ் செய்து, 10-வது செய்யுளில் "சோதிபுஞ்சநின்வடிவுடை" என்றதால் சகுண ஐசுவரியத்தையும் லீலாவிக்ரகத்தின் ஆடல் முதலியனவும் வருணிக்கப்பட்டன. இப்போது அத்விதிய பிரம்ம சொரூபம் பிரதி பாதிக்கத்தக்தாய் எஞ்சியது. அதைக் கூறுவிடின் நிர்க்குண பிரம்ம சொரூபமே சர்வ சுருதி ஸ்மிருதிகளின் தாத்பர்யத்திற்கு விஷயமாதலினுல் உண்மையா யிருத்தலினுனும், சர்வப் பிரபஞ்சமும் சொப்பனம்போல் மித்தையாயிருத்தலினுனும், முன் சொன்ன சர்வமும் உமிழ்த்துதல் போன்ற வியவகாரமாகும். ஆகையால் நிர்க்குணபிரம்ம நிரூபணத்தின்பொருட்டு மேற் செய்யுட்களின் ஆரம்பமாம். ஆண்டு முன் 24-வது செய்யுளில் "நீ பரமமங்கல" மென்று பிரதி பாதிக்கப்பட்டது. அதில் இங்ஙனம் ஆக்ஷேபிக்கப்படுகின்றது :—மங்கலமென்பது சுகம் ஈசுவரனுக்குச் சுகவடிவத்தன்மை பொருந்தாது; யேனெனின் சுகம் உண்டாகின்றமையானும் குணமாதலினுனுமாம், ஈசுவரன் நித்தியராதலினுனும், திரவியத்தினும் வேறானவராதலினுனுமாம். நித்தியமான இச்சா ஞான பிரயத்தன முடையஈசுவரன் சுகவடிவனும் சுகாசிரய (இருப்பிட)னு மன்று எனத்தார்க்கிகர் கூறுகின்றனர். கிலேசம் கருமம் பலன் வாசனை என்னு மிவைகளின் சம்பந்தமின்றிய புருஷ விசேஷனான ஈசுவரன், சேதனவடிவன் சுகவடிவனன்று என்று பாதஞ்சலர் கூறுகின்றனரென்னுமிவற்றையே ஈசுவரன் அத்விதியமும் சுகவடிவமு மன்றென சங்கையாகவைத்து அவாத்வி

தீய பரமானந்த ரூபரென்பதற்கு வித்வான்களது அனுபவவடிவ பிரத்தியட்சப் பிரமாணத்தைச்சமாதானமாய்க் கூறுபவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்றார்.

சித்தமதிற் பிரத்தியக்கா முளந்தனையே நிறுவிச் செறிவிதங்க டமின்மருத்தைக் கருத்தினுட னிறுத்தி, மெத்தபுள கிதமடைந்து மகிழ்வதனி னுதிநீர் விழிக ளிரண்டினுந்ததும்ப யெதிகளனு தினமு, மெத்தகையோ தத்துவத்தின் றரிசனத்தைப் புரிந்தே யினியவமு துவின்மடுவின் முழுகினவ ரெனவே, சுத்தநிர திசயசுகந் தரிப்பரதுண் மைபதாய்ச் சுருதிதொழுந் தேவரீ ரெனத்துதிசெய் குதுமே. (25)

(இ-ள்) யெதிகள் - யோகீஸ்வரர்கள், பிரத்தியக்காமுளந்தனை - அந்தர்முகமான மனதை, சித்தமதில் - ஹிருதயதாமரையில், நிறுவி - நிறுத்தி, மருத்தை - பிராணவாயுவை, செறிவிதங்கள்தமின் - பொருந்திய சாதன விதங்களோடும், கருத்தினுடன் நிறுத்தி - விருத்தியோடும் அடக்கி, எத்தகையோகத்துவத்தின் - இன்னதென்று சொல்லக்கூடாத வஸ்துவினது, தரிசனத்தைப் புரிந்து - ஞானத்தை அடைந்ததினால், மெத்த புளகிதமடைந்து - மிக்க ரோமாஞ்சலியுடையவராய், மகிழ்வதனில் - சந்தோஷத்தால், விழிகளிரண்டினும் - இரண்டு நேத்திரங்களின், நுதி-நுனியில், நீர் ததும்ப - ஆனந்தக்கண்ணீர் பெருகியோட, அனுதினமும் - தினந்தோறும், இனிய அமுதின் மடுவில் - இனிமையான ஆனந்தமடுவில், மூழ்கினவரெனவே - ஆழ்ந்தவரைப்போல், சுத்த நிரதிசய சுகந்தரிப்பர் - பரிசுத்தமான எல்லையற்ற ஆனந்தத்தை அடைகின்றார்கள், அது - அவ்வானந்தம், சுருதிதொழும் - வேதங்களாற்கூறப்படும், உண்மையதாய்-சத்தியவடிவான, தேவரீரென - உமது சொரூபமேயென்று, துதிசெய்குதும் - தோத்திரஞ் செய்கின்றோம் எ று.

(வி-ரை) சம தமாதி சாதன சம்பன்னர்களும் பரம அம்சர்களுமான சந்நியாசிகள் வேதாந்தவாக்கியத்தா லுதயமான அகண்

டாகாரவிருத்தியால் வாக்கா லிஃதெனக் கூறமுடியாததாய் சத்தியக்ஞானனந்தவடிவாயிருக்கும் யாதோவோர் வஸ்துவைப்பார்த்து, நித்தியத்தன்மையால் முன்னமே யுள்ளதான வெளிவிஷயசுகத்தினும் வேறான முடிவற்ற ஆனந்தத்தை அடைகின்றனர். அது தேவரீர் வடிவமாம். சுருதிகளில் தேவரீர் சத்தியக்ஞானனந்தவடிவாகவே பிரதிபாதிபாதிக்கப் பட்டிருக்கின்றீர். தார்க்கிகாதியர் பிரதி பாதித்தபடியன்று. ஆகையால் தேவரீர் எங்ஙனம் பரமமங்கல மாகமாட்டீரென்பது சொல்லெச்சம். இவ்வெல்லையற்ற ஆனந்தத்திற்கு திருஷ்டாந்தங் கூறுகின்றார்; எதன் இலேசசம்பந்தத்தால் சர்வதுக்கமின்றிய அமிர்தமயமடுவில் மூழ்கினவரென சுகிகளாகின்றனரென்று. அதில் மூழ்கலான சர்வாங்கசம்பந்தத்தால் யாது சொல்லவேண்டுமென்றதால் காரணத்தினாச்சரியத்தாற் காரியத்தினாச்சரியங் குறிப்பிக்கப்பட்டது. சர்வத்தினுஞ் சிரேஷ்டமான பிரம்மானந்தத்திற்கு யாதொரு திருஷ்டாந்தமுமில்லை யெனினும், உலகரது புத்திதிடத்தன்மையின் பொருட்டு இங்ஙனஞ் சிறிதுசமமுடையதாக திருஷ்டாந்தம் பிரதிபாதிக்கப்பட்டது. இப் பிரம்மானந்தானு பவத்திற்கு அசாதாரண (சிறந்த) காரணங் கூறுகின்றார்; பிரத்தியக்குளம் என்று. சாஸ்திரத்திற் சொல்லியவண்ணம் பிராணயாமத்தால் வாயுவையடக்கின சந்நியாசிகள் விழிமுதலிய பொறிகளின் வழியாயான வெளிப்பிரவிருத்திக்குப் பிரதிகூலமாய் உள்முகமாக்கப் பட்டதாயும், சங்கற்பவிகற்ப வடிவமானதாயுமுள்ள மனதை ஹிருதயதாமரையில் விருத்தி சூனியமாகும்படி நிறுத்துகின்றனர். ஆண்டு விதங்களுடனென்றதால் இயமநியமாதிகள் சூசிப்பிக்கப்படுகின்றன. நிறுவியென்றது நான்காவது கும்பகத்தையாம். விஷயங்களினின்றும் இந்திரியங்களை நிவர்த்தித்த (அடக்க) லென்னும் பிரத்தியாகாரத்தைப் பிரத்தியக்''கென்னும் பதத்தால் குறிப்பித்தார். "சித்தமதில்'' என்றதால் ஹிருதயாம்புஜமென்னும் தேசசம்பந்தமாம். அதனால் சமூகாலம்பனமென்னுந் தாரணையைக் கூறினார். நிறுவி என்றதால் தியானசமாதிகளைக் கூறினார். அது பதஞ்சலிபகவானால் "தேசசம்பந்தம் சித்தத்தின்தாரணை'' "ஆண்டுவிருத்தி யோரிடமுடமை தியானம்''

"தனதுரூபம் சூன்யம்போல் அவ்வர்த்தமாத்திர விளக்கஞ் சமாதி" என்று கூறப்பட்டது. இதில் மனவடக்கத்தின் பொருட்டு மூலாதார சுவாதிஷ்டான மணிபூரக அநாஹதவிசுத்தி ஆக்ஞாஎனப்படுஞ் சக்கரங்களில் யாதேனுமோர் சிரேஷ்டமானதில் மனதைநிறுத்துதல் தாரணை எனப்பட்டது. ஒரே விஷயத்தைக்குறித்துச் செல்லும் விருத்திக்கு ஏகதானத்தன்மை யெனப்பெயர். அது இரண்டு விதம், ஒன்று இடைவிட் டிடைவிட் டுண்டாவது; மற்றொன்று இடைவிடா துண்டாவது. இவ்விரண்டுங் கிரமமாய்த் தியானசமாதிகளெனப்பட்டன. இதனால் அஷ்டாங்கயோகத்தின் பரிபாகம் பிரம்மசாக்ஷாத் காரத்திற்குக்காரணமான நிதித்தியாசனவடிவாய்ச் சொல்லப்பட்டது. இங்ஙனம் பிரம்மானந்த அனுபவத்தின் காரணங்கூறி "மெத்தபுளகிதமடைந்து" எனவும் "மகிழ்வதனில் விழிகளிரண்டினு நுதி நீர்ததும்பி" எனவுங் காரியத்தைக் கூறினார். இவ்விரண்டும் யோகியரின் ஆனந்தானுபவத்தினது அனுமானத்தின் லிங்கங்களாகக் கூறப்பட்டன. ஈண்டு மெத்த என்றதாலும் ததும்பஎன்றதாலும் லௌகிகசுகத்தினும் மேலான சிறப்புக் குறிக்கப்பட்டது. அந்நியமாயிருந்தும் எவ்வுண்மையான வஸ்துவின் பார்வைமாத்திரத்தால் மேலான ஆனந்தத்தை அடைகின்றாரோ அதுதானே மேலான ஆனந்தவடிவம் என்பதற்கு யாது சொல்ல வேண்டுமென்பது பொருள். "விக்ஞானம் ஆனந்தம் பிரம்மம்" "ஆனந்தம் பிரம்மமென்றறிய வேண்டும்" "இதுவே மேலான ஆனந்தம்" "பூமாயாதோ வதுசுகம்" "இவ்வாகாய மானந்தமின்றெனின் எவன்தான் அன்னியத்தினின்றும் உயிர்ப்பான்" என்னுமிவைமுதலிய சுருதிகளும் இப்பொருளிற் பிரமாணங்களாம் எ - று.

(அ-கை) இங்ஙனம் சர்வாத்மக (எல்லா) ரூபமாயும் பரமானந்தரூபமாயும் அத்விதியரூபமாயு மிருக்கும் பிரம்மத்தின்கண் ஞானிகளின் அனுபவரூபமான பிரத்தியக்ஷப்பிரமாணங் கூறப்பட்டது இப்போது அதற்கே அத்விதியத்தன்மையைத் தருக்கத்தாலுஞ் சாதிக்கின்றவராய்த் துதிக்கின்றார்.

தரணிநீ மதியநீ பவனநீ தழலுநீ தண்ணீருநீ ககனநீ, தரணிநீ புருடநீ யெனவுமிவ் விதமுநின் றன்னிலே தருண மதியா, ருரையதே குறையதா முறுகவெத் தத்துவம் முல கிலே யாமறிகிலேங், கரையிலா வருளுலாம் வரதனே யெதுவலாய் கருதுதற் கரியநீயே. (26)

(இ-ள்) கரையிலா வருளுலாம் வரதனே - அளவற்ற கருணை யுடைய வள்ளலே! தரணிநீ - பூமியுநீர், மதியநீ - சந்திரனும் நீர், பவனநீ - வாயுவுநீர், தழலுநீ - நெருப்புநீர், தண்ணீருநீ - ஜலமுநீர், ககனநீ - ஆகாசமுநீர், தரணிநீ - சூரியனுநீர், புருட நீ - ஜீவான்மாவுநீர், எனவும் இவ்விதம் - என்று இந்தப்பிரகார மாக, நின்றன்னிலே - தேவரீரது சொரூபநிச்சயத்தில், தருணமதி யார் பரிபக்குவமானபுத்தியையுடையவர்கள், உரையது - பிரதிபா திக்கும் வாக்கியமானது, குறையதாம் உறுக - குறைவையுடைய தாயிருக்குக, கருதுதற்கரியநீ - நினைக்கொணாததேவரீர், உல கிலே - இவ்வுலகத்தின்கண்ணே, எது அலாய் - எப்பொருளா யின்றோ, எத்தத்துவம் - (அப்படிப்பட்ட) யாதோர்பொருளும், யாம் அறிகிலேம் - எங்களுக்குத்தோன்றவில்லை எ - று.

(வி-ரை) பரிபக்குவமான புத்தியையுடையவர் தரணிமுதலிய பரிச்சின்னவடிவங்களாகத் தேவரீரைக்கூறுக. ஈண்டு நீயென்னுஞ் சர்வமும் வாக்கியாலங்காரத்தின் பொருட்டு வந்தன. தரணிமுதலி யன பிரசித்தமானவை. இவ்வெட்டும் ஸ்ரீ ருத்திரமூர்த்தியின் வடி வங்களாக ஆகமப்பிரசித்தமாய் 28-வது செய்யுளிற் சொல்லப்போ கின்ற "பவன்" முதலிய எட்டு நாமங்களோடுங் கூடியனவாய் நான்காம்வேற்றுமையையும் நம: என்பதையும் ஈற்றிலுடையன வாய் எட்டு மந்திரங்களாகின்றன; அவை குருவினுபதேசத்தா லறி யத்தக்கன. இவ்வஷ்டமூர்த்தமும் "மதி பருதி யெரி நீர் கால் வானவனி யியமான னெனவெட்டு மூர்த்தியா யுலகைத்தாங்குகின் றான் நமஸ்காரம்" என்று மற்றோரிடத்திலுங் கூறப்பட்டிருக்கி றது. சர்வான்மாவாயினுந் தரணிமுதலிய எட்டுமூர்த்தியாகமாத்தி ரம் இதனாற் கூறுகின்றனரென்பது பொருள். ஈண்டு, பரிபக்குவ

மின்றியவர் என்னும் பொருளில் தருணம்தியினர் என்று பரிகாச மாய்க்கூறப்பட்டது. உறுக என்ற வியங்கோள் சம்மதமின்றிய திலும் சம்மதியை விளக்குகின்றமையின். அதனால் எவ்விதத்தி னும் உசிதமன்றென்பது பொருள். அப்போது உசிதமான வெத னைப்பார்த் திதுவுசிதமன் றென்கின்ற ரெனின் உலகில் எவ் வஸ்து நீயின்றி வேருயிருக்குமோ அதனையாம் அறிகிலேம் என்று அதனைக் கூறினர். ஈண்டு பிரமாண குசலத்தன்மையால் தனது மேன்மையை விளக்கும் பொருட்டு அறிகிலேமென்று பன்மையா கக்கூறினர். யாங்கள் எனினே யுக்தியால் தேவரீரின் அபின்ன மாகவே அறிகின்றேமென்பது பொருள். இங்ஙனந்தேவரீர் சர் வான் மகமாயிருக்கும் போது தாணிமுதலிய விசேஷவடிவாய்க் கூறுதல் வியர்த்தமேயாம். அங்ஙனமே சுருதியும் "இந்திரனாக வும், மித்திரனாகவும், வருணனாகவும், அக்னியாகவும் தேவர்கூறுகின் றனர். அவன் கருடன் விப்பிரர்கள் ஒன்றானசத்தை அனேக மாய்ச்சொல்லுகின்றார்கள். எவனே அக்னியென்றும் வாயுவென்றும் சொல்லுகின்றனர். இவனே சர்வதேவர்கள்" என்று சர்வதேவ பேதத்தை நீக்குகின்றது. சத்தின் வேறாக அற்பமு மறியப்படுகிற தில்லை சத்ரூப ஆன்மாவும் நீயேயென்றதால் தருக்கத்தாலும் அத்வைதம் சித்தித்தது. சர்வமும் பிரம்மவடிவமாகுங்கால் கடாதி ஞானமும் பிரம்மஞானமாதலின் அதனாலும் மோக்ஷமுண்டாமென் னும் பிரசங்கங்கூடாது. ஏனெனின் கடாதியாகாரஞானத்திற்கு அவித்தையினற்கற்பிக்கப்பட்ட அன்னியத்தோடுற்ற சைதன்னி யம் விஷயமாதலினாலும், இதாசம்பந்தமின்றிய சைதன்யாகார மானதற்கே மோக்ஷகாரணத்தன்மையினாலுமாம். அன்னியத்தோ டுற்ற சைதன்யமும் சத்ரூபத்தால் சக்ஷுமுதலியவற்றிற்கு விஷய மாயினும் வேதாந்தவாக்கியஜன்னிய ஞானத்திற்கு அபேக்ஷையின் றிய அன்னியசம்பந்தங் கொள்ளப்படாதபடியால் வேதாந்தவாக்கி யத்திற்கு விஷயமாதலில் வியாகாதமின்று. ஆக்ஷேபம் சர்வமும் சன்மாத்திரமாயினும் அத்வைதம் சித்தியாது. வேற்றுமையுடைய தும் சத்தாஜாதியின் சம்பந்தத்தால் சத்துஎன்ற புத்திக்கு விஷய மாதலின், அங்ஙனமின்றேல் திரவிய குண கரும முதலிய பேதவிய

வகாரமும் பொருந்தாது எனின்? அற்றன்று திரவியம்சத்து குணம் சத்து என்பனமுதலிய தோற்றத்திற்கு திரவியத்தன்மை முதலிய தருமத்தோடுற்ற ஒன்றான சத்துமாத்திரம் விஷய மாகின்றது. பேதமுடைய திரவிய முதலிய தருமிகளில் சத்தையெனப்படுந் தருமம் விஷயமாகிறதில்லை; தருமிகற்பனை யினும் தருமகற்பனை இலாகவமாதலின். சர்வ அபேதமான ஒரே சந்திரனிடத்திலும் இருமதி (இரட்டைச்சந்திரன்) யென்பதுபோல மாயையாற் கற்பிக்கப்பட்ட நாநாத் தன்மையின் தோற்றம் பொருந்துகின்ற படியால், பாரமார்த்திக பேதகற்பனைக்கு இடமே யில்லை. அங்ஙனமே திரவியமிருக்கின்றது, குணம் இருக்கின்றது என்பதாதி இப்பெதவியவகாரமும் சர்வவேற்றுமை களிலும் அனுஸ்யூத மாய் (உள்ளீடாய்) ஜாதிவடிவமான ஒரே வஸ்துவை மாத்திரம் பற்றியது, பேதவியவகாரமாதலின் இருமதிபேதவிய வகாரம்போல் என்னுமிவ்வனுபவம் நிகழ்கின்றது. ஆகையாற் சேதனத்தோடுற்ற தேனும், சேதனத்தோடுறா தேனும் பரமான் மாவினு மன்யமாய் அற்பப்பொருளுமின்றாம். அங்ஙனமே "அவ்விவ் வான்மா ஈண்டுபிரவே சித்தது" "இச்சீவான்மாவா யனுப்பிரவே சித்து நாமரூபங்களைச் செய்தார்" என்னுமிவை முதலிய சுருதி களால் பிரவேசித்துவிகார மின்றி யிருப்பதே ஜீவவடிவாய்ப் பிரவே சித்தலைப் பிரதிபாதித்தலாலு மென்பதாம்; அப்படியே "இவ் வான்மா இவையனைத்தும்" என்பன முதலிய சுருதிகளால் பிரம் மம் ஒன்றானேயே யுண்டாய் சாமான்ய பிரம்ம மொன்றிலேயே இலயமாகுமென்னும் இவைமுதலியன வேறுபிரமாணங்களாம். ஊர் ணநாபி திருஷ்டாந்தத்தால் ஆகாசாதிபிரபஞ்சம் பிரம்மமாத்திர மெனவும் பிரதிபாதிக்கப்பட்டது. அது "சௌமியனே! இது முன்சத்தாகவே யிருந்தது" "அத்துவிதீயம் ஒன்றே" என்றும் வெளிப்படையான சத்தத்தாலும் சொல்லப்பட்டது. இங்ஙனம் சத்தின்வடிவான பிரத்தியக்ஷ பிரமாணமும், அபேதவியவகாரத் தன்மையின் இலிங்கமும், சர்வான்மக வடிவத்தைக் கூறுஞ்சுருதி வேறுவழியாகப் பொருந்தாமையும் ஆகிய மூன்றும் பிரமாணங் களாகக் கூறப்பட்டன. இப்பொருளில் விரிவான தருக்கம்

வேதாந்த கல்பலதிகையில் காணத்தக்கது. ஆகையால் அறிகிலே மென்பதாதியால் பிரதிபாதிக்கப் பட்ட அத்துவிதியத்தன்மை பொருத்த முடையதேயாம் எ-று.

(அ-கை) இங்ஙனம் பிரத்தியக்ஷம் அனுமானம் அருத்தா பத்தி யென்னும் பிரமாணங்களால் பரமேசுவரனுக்குச் சித்தித்த சர்வான்மகத்தன்மையால் அத்துவிதியத்தன்மையை நன்ருகப்பிரதி பாதித்து அதனையே ஆகமத்தாலுஞ் சாதிப்பவராய்த் துதிக்கின் ருர்; அல்லது முற்செய்யுட்க ளிரண்டினுலும் முறையே துவம்ப தார்த்தத்தையும் தத்பதார்த்தத்தையும் பரிசோதனை செய்து இச்செய்யுளால் அகண்ட வாக்கியார்த்தத்தைப் பிரதிபாதிப்பவ ராய்த் துதிக்கின்ருர்.

மறைதெய்வம் புவன மவத்தைமும் மையினை வன்னக ராதியால் வழங்கி, யறிதரப் புரியும் வியத்த வோங்கார வருமொழி வியத்தவுன் றனையே, நெறிதுரி யமதில் விளங் கிடுஞ் சமஸ்த நிருவிகா ரமெனுமுன் றேசை, யறிவரு மணு வின் மொழிகளா லறிவித் தறைந்திடுஞ் சரண்டரு மர னே. (27)

(இ-ள்) சரண்தரும் அரனே - அபயத்தைக் கொடுக்கும் அரனே! ஓங்கார அருமொழி-ஓம்என்ற அரிய பிரணவவாக்கியம், வியத்த - தூலமான வடிவத்தால், மறை-இருக்கு முதலிய மூன்று வேதங்கள், தெய்வம் - பிரம்மாமுதலிய மூன்றுதேவதைகள், புவ னம்-பூலோக முதலிய மூன்றுலகங்கள், அவத்தை - சாக்கிரமுதலிய மூன்றவஸ்தைகள், (என்னும்) மும்மையினை - மும்மூன்று வஸ்துக் களாக, வன்னகராதியால்-வர்ணங்களாகிய அகர முதலிய மூன்றெ ழுத் துக்களால், வியத்த உன்றனையே அறிவித்து - வெளிப்படை யாய் ஸ்தூலமாய் பின்னபின்னமாய் விளங்குந் தேவரீரையே பிரதி பாதித்து, அறிவரும் - அறிதற்கு அரிய, அணுவின் மொழிகளால் - சூக்ஷமமான வாக்குகளால், நெறிதுரியமதில் - ஒழுங்கான துரி யாவஸ்தையில், விளங்கிடும் - பிரகாசித்துக்கொண்டிருக்கும், நிரு விகாரமெனும் உன் தேசை - விகாரமற்ற சொரூபமான தேவரீ ரது ஞானரூபத்தை, அறைந்திடும் - பிரதிபாதியாநிற்கும் எ - று.

(வி-ரை) ஓம் என்ற பதம், காரணத்தாலும் இடுகுறியாலும் சர்வான்மாவாயும் அத்துவிதீயமாயுமி இருக்கின்ற தேவரீரையே பிர திபாதிக்கின்றது. ஓங்காரம் அவயவத்தில் சக்தியையுடைமையால் வாக்கியமாயினும் சமுதாயத்தில் சக்தியையுடைமையால் பதமுமா கின்றது. அதாவது, அகார உகார மகாரமென்னும் மூன்று பதங் களைப்பண்புத்தொகையாக உடமையின் சமுதாயத்தில் (பொது வில்) சக்தியையுடையதாயும், அகார உகார மகார மென்னும் சுதந் திரமானமூன்று பதங்களை வேற்றுமைத் தொகையாக வுடைமை யின் அவ்யவத்தில் சக்தியையுடையதாயுமிருக்கும் ஓம் என்ற பதம், பங்கஜ முதலியவற்றிற்குக் கா ர ண இடு குறி அங்கீகரிக்கப்பட் டிருத்தல் போல் சமஸ்தமா (சர்வான்மாவா) யும் வியஸ்தமாயும் (அத்யாத்ம அதிதைவபேதமாயும்) இருக்கு முன்னைக் கூறுகின்றது எனப் பொருள். இதனையே மறை தெய்வ மென்பதாதியாற் கூறி னர். அதாவது, இருக்கு எஜுர் சாமம் சாக்கிர சொப்பன சுழுத்தி, இது அந்தக்கரணத்தின் அவஸ்தை அதனல் விஸ்வன் தைஜசன் பிராக்ஞன் என்பவற்றிற்கு உபலக்ஷணமாம். பூலோகம் புவர்லோ கம் சுவர்லோகம், இதுவும் விராட்டு இரணியகர்ப்பம் அவ்யாகிருத மென்பவற்றிற்கு உபலக்ஷணமாம். பிரம்மா விஷ்ணு மஹேஸ்வரன், இதுவும்சிருஷ்டி திதி பிரளய மென்பவற்றிற்கு உபலக்ஷணமாம். இவை யனைத்தையும் அகார முதலிய மூன்று வர்ணங்களால் சக்தி விருத்தியைக்கொண்டு வியஸ்த ஓங்காரம் பிரதிபாதிக்கின்றது என் பதுபொருள். ஈண்டிது விசேஷமாம், இருக்வேதம் ஜாக்ராவஸ்தை பூலோகம் பிரம்மா என்னு நான்கும் அகாரத்தின் பொருள். யஜுர்வேதம் சொப்பனவஸ்தை புவர்லோகம் விஷ்ணு என்னு நான்கும் உகாரத்தின் பொருள். சாமவேதம் சுழுத்தியவஸ்தை சுவர்லோகம் மகேசுவரன் என்னு நான்கும் மகாரத்தின் பொருள் என்பதாம். இப்பொருள் மாண்டுக்கியம் நிருசிம்மதாபநீயம் அதர்வசிகாதி முதலிய வற்றிலுஞ் சொல்லப்பட்டது. அது அதிக இரகசியமாதலின் குருவின் உபதேசத்தா லறியத்தக்கது. ஆகை யால் ஈண்டு விசேஷமாய்ச் சொல்லப்படவில்லை. எனைய விடங் களில் அத்தியாத்ம அதிதைவ அதிபூத அதிவேத அதியக்ஞமென்

பதாதியாக எவ்வளவு சொல்லப்படுகின்றதோ, அவையனைத்தை யும் குறைவை நீக்கும்பொருட்டு ஈண்டு உபசம்மாரஞ் (முடிவுபெறச்) செய்யவேண்டும். அங்ஙனமே சர்வ விகார (காரிய) அதீத மான துரியமாயும், அவஸ்தாத்திரய அபிமானிக்கு விலக்ஷணமாயும், அகண்டசைதன்யமாயு முள்ள உன் சொரூபத்தை, அனுவான சூக்ஷ்ம சத்தங்களை யுடையதாயும், சுதந்திரமாய்க் கூறமுடியாமை யால் நலிதலென்னு முச்சாரண முடையதாயும் உள்ள ஓங்காரம் சமுதாய சக்தியால் (பொதுவாற்றலால்) அறிவிக்கின்றது. ஈண்டு உன் சொரூபம் என்றது இராகுவின் சிரம் என்பதுபோல் உபசாரமாம். சத்தங்களின் எடுத்தல் படுத்தல் நலிதலென்னு முச்சாரணங்களை குருவுபதேசத்தா லறியவேண்டும். இங்ஙனம் பதார்த்தத்தைக் கூறும் வாயிலாக அகண்ட வாக்கியார்த்தத்தின் சித்தியும் பொருளாற் கூறப்பட்டது. அஃதெங்ஙனமெனிற் கூறுகின்றார். ஸ்தூலப் பிரபஞ்ச வுபகிதசைதன்யம் அகாரத்தின் பொருள், ஸ்தூல பிரபஞ்ச பாகத்தை நீக்குதலினுல் சைதன்யமாத்திரம் அகாரத்தால் இலக்ஷிக்கப்படுகின்றது. (லக்ஷணையால் அறியப்படுகின்றது) சூக்ஷ்ம பிரபஞ்ச வுபகித சைதன்யம் உகாரத்தின் பொருள், சூக்ஷ்ம பிரபஞ்ச பாகத்தை நீக்குதலினுல் சைதன்யமாத்திரம் உகாரத்தால் லக்ஷிக்கப்படுகின்றது. ஸ்தூல சூக்ஷ்ம பிரபஞ்ச மிரண்டின் காரணவடிவ மாயாவுபகித சைதன்யம் மகாரத்தின் பொருள், அந்த மாயாம்சப் பரித்தியாகத்தால் கேவல சைதன்ய மாத்திரம் மகாரத்தின் பொருளாக இலக்ஷிக்கப்படுகின்றது. துரியத்தன்மை சர்வானுகத (சர்வத்திலுமுள்ளீடு)த் தன்மை என்னுமிவற்றோடுங்கூடிய சைதன்யம் அனுமொழிகளின் பொருள்; அவ்வுபாதியை நீக்குதலினுல் சைதன்யமாத்திரம் அனுமொழிகளால் இலக்ஷிக்கப்படுகின்றது. இங்ஙனம் நான்கின் சாமானாதிகரணத்தாலுண்டாம் ஞானத்தில் சர்வ துவைதமு மில்லாதபடியால் பரிபூரண அத்துவிதிய சைதன்யமாத்திரம் சித்தித்ததாகின்றது. இலக்ஷணையாற் றள்ளப்பட்ட வனைத்தும் மாயாமயமாகவும் மாயாகாரியமாகவு மிருத்தலின் மித்தையாம். ஆகையால் சொரூப ஞானத்தால் அஞ்ஞானவடிவமாயை அதன்காரியம் நீங்கினபின்னர்

அவை வேருக இருக்கின்றனவென்னுங் கேள்வியின்று. ஏனெனின் அதிஷ்டான சாக்ஷாத்காரத்தின் பின்னர் சர்வாத்தியஸ்தங்களும் சொப்பனம்போல் விளங்காமையால் வேதாதிகள் வாக்கியார்த்த போதத்திற்கு உபயோகமாகாவிடினும் உபாசனைக்கு உபயோகமாதலின் வேருய்க் கூறுதலைக் காணவேண்டும். ஆகையால் சர்வதுவைதமின்றிய பிரத்தியக்கபின்ன பிரம்மம் பிரணவ வாக்கியார்த்தமென்பது சித்தித்தது. இதுவும் தத்துவமசியாதி சர்வ மகாவாக்கியங்களுக்கும் உபலக்ஷணமாம். அவைகளும் பிரத்தியக்க பின்ன பரிபூரண அத்துவிதீய பிரம்மத்தைப் பிரதி பாதிக்கின்றமையால். அங்ஙனமே சத்தத்தால் அபரோக்ஷ நிர்விகல்ப ஞானமுண்டாமென்பது வேதாந்த கல்ப லதிகையிலும் விரிவாய்க் கூறப்பட்டதென்று உபரதியடைகின்ருேம் எ - று.

(அ-கை) இங்ஙனம் பிரணவம் அத்துவிதீய பிரம்மத்தின் வாசகமென்றுப் பிரதிபாதிக்கப்பட்டது. இதன் அர்த்தத்தைச் சிந்தனைசெய்தலும் இதனைச்செபித்தலும் சமாதிக்குச் சாதனமென்று பதஞ்சலிபகவான் "சமாதிசித்தி ஈஸ்வரப் பிரணிதானத்தால்" என்றும் "ஈஸ்வரப்பிரணிதானத்தா லாவது" என்று வேறு சூத்திரத்திலுங் கூறி "அதன்வாசகம் பிரணவமும்" "அச்செபம் அவ்வர்த்தபாவனை" என்னு மிவ்விரண்டு சூத்திரங்களால் பிரணிதானசத்தத்தின்பொருள் பிரணவஜெபமென்றுங் கூறினர். சுருதியிலும் "இப்பற்றுக்கோடு சிரேஷ்டம் இப்பற்றுக்கோடுமேலானது" "இப்பிடிப்பை யறிந்தெவனெதைவிரும்புகின்ருனே அவனுக்கது" என்பன முதலியவற்றல் அதற்கு சர்வபுருஷார்த்த சாதனத் தன்மை கூறப்பட்டது. இதுவும் அறிய மிக கஷ்டமாதலினுனும் ஸ்திரீகளுக்கும், விஷயாசக்தர் சிறியதைக்கொடுத்து பெரியதைக் கவருபவர் சமுசாரசோகர் ஆகிய சூத்திரர்களுக்கும், அதிகாரமின்மையினுலும் அத்தியந்த நிவர்த்திபரரான பரமஹம்ச சந்நியாசிகளுக்குமாத்திரம் அசாதாரணமாய் (சிறப்பாய்)இருக்கின்றது. அதனுல் சர்வசாதாரணமாய் பரமேசுவரநாமங்களான பிரசித்தமான பதங்களை ஜெபத்தின் பொருட்டாயுள்ளன வெனப் பிரதிபாதிப்பவராய்ப் பரமேசுவரனைத் துதிக்கின்ருர்.

பவன்சருவ வுருத்திரனே டமலமான பசுபதியோ
டுக்கிரன்மா தேவ தேவ, னுவமையறு பீமனீ சானனென
வுயர்பெயரி னட்டகமா மிதிலோ ரொன்றைப், பவமறநற்
சரணமது தருகுந் தேவ பழமறையும் புகழ்தருமவ் வரிய
னென, சிவனெனுமெற் கதிபிரிய வறிவா நின்னைச், சிர
மொடுமுக் கரணமதில் வணங்கி னேனால். (28)

(இ-ள்) பவமற - அன்பர் பிறப்பற, நற்சரணமது தருகுந் தேவ - நல்லஅபயஸ்தானத்தை யளிக்குமிறைவனே! பழமறையும்- அனாதிவேதமும், பவன் - பவனென்றும், சருவன் - சருவனென்றும், உருத்திரன் - உருத்திரனென்றும் அமலமான - பரிசுத்தமான, பசுபதி - பசுபதியென்றும், உக்கிரன் - உக்கிரனென்றும், மாதேவன் - மகாதேவனென்றும், உவமையறு - சமானமற்ற, பீமன் - பீமனென்றும், ஈசானன்-ஈசானனென்றும், (சொல்லப்படுகின்ற) உயர் - மேன்மையான, பெயரின் அஷ்டகமாம் இதில்-இவ்வெட்டு நாமத்தில், ஓரொன்றை-ஒவ்வொருநாமத்தால், (தேவரீரை) புகழ்தரும் - பிரதிபாதியாநிற்கும், அவ்வரியனென-அங்ஙனம் மேன்மையாகிய, சிவனெனும் - சிவபெருமானெனப்படும், எற்கு அதிபிரிய அறிவாம் நின்னை - எனக்கு அதிக சந்தோஷ விஷயமாய் அறிவு வடிவமான தேவரீரை, சிரமொடுமுக்கரணமதில் - சிரசு முதலிய மூன்று கரணங்களினால், வணங்கினேன் - நமஸ்கரிகின்றேன். எ - று.

(வி-ரை) இரண்டுஒடும் எண்ணிடைச்சொல்;ஆல் அசை நிலை; கால வழுவமைதி. மறையுமென்ற உம்மையால் ஸ்மிருதி புராண ஆகமங்களும் இவ்வெட்டுநாமங்களில் ஓரொன்றை வேதம்போல் பற்றிக்கொண்டு உலகத்தில் பிரதிபாதிப்பனவாய் விளங்குகின்றன. எவரது நாம உச்சாரண மாத்திரம் சர்வபுருஷார்த்தத்தையுங் கொடுக்கின்றதோ அவர் எப்படிப்பட்ட பெருமையை யுடையவரோவென்னும் பக்தியின் மிகுதியால் சிரமொடுமுக் கரணமதில் வணங்கினேன் என்றார். இதனால் தேவரீரை வணங்கினவனாகமாத்திர மிருக்கின்றேன் எ - று.

(அகை) இங்ஙனந் தலையன்பான மிக்கபக்தி யுடையோன் நமஸ்காரமாத்திரத்தைச் செய்வானென்று பிரதிபாதிப்பவராய்ப் பரமேசுவரனைக் துதிக்கின்றார்.

போற்றியண் மையதொடு சேய்மைய போற்றி போவ தற் கருவனம் பிரியமாய்ப் புகுவோய், போற்றிமன் மகத் தொடு மணுவனே போற்றி பூங்கணை யவனைமுன் பொடித் திடும் பொருளே போற்றியெவ் வனமிகு விருத்தனே போற்றி பூங்கதிர் மதிதழ லெனும்புகழ் நயன, போற்றியெ லாவுரு வாநின் பொன் மலர்கள் போமது விதுவெனு முழு துளாய் போற்றி. (29)

(இ-ள்) போவதற்கு அருவனம்பிரியமாய்ப் புகுவோய் - மனித சஞ்சாரமின்றிய அரிய ஆரணியத்திலன்போடு திரிபவரே! அண் மையபோற்றி - மிகச் சமீபத்திலிருக்கு முனக்குநமஸ்காரம், சேய் மையபோற்றி-மிகத்தூரத்திலிருக்கு முனக்குநமஸ்காரம், பூங்கணை யவனை முன்பொடித்திடும் பொருளே - புஷ்பபாணங்களையுடைய மன்மதனை அக்காலத்திலெரித்த சிவபெருமானே! மன்மகத்த போற்றி-மிகப்பெரியரேவுனக்கு நமஸ்காரம், அணுவனேபோற்றி - மிகச்சிறியரேவுனக்குநமஸ்காரம், பூங்கதிர்மதிதழல் என்னும் புகழ் நயன - அழகிய சூரியன் சந்திரன் அக்கினியென்று புகழப்பட்ட மூன்று நேத்திரமுடையவரே! யவ்வனபோற்றி - மிகயவ்வனப் பருவத்தினனானவுனக்கு நமஸ்காரம்,மிகுவிருத்தனேபோற்றி-அதிக விருத்த பருவத்தினனானவுனக்கு நமஸ்காரம், போம் - தூரமாய், அது - அதுவென்றுபரோக்ஷமாய்ப் படர்க்கையிலும், இது - இது வென்று அபரோக்ஷமாய் முன்னிலையிலும் பிரதிபாதிக்கப்படும், முழுதுளாய் போற்றி - சர்வவடிவமானவுனக்கு நமஸ்காரம், எலா வுருவாம் நின்பொன் மலர்கள் போற்றி-சர்வ சொரூபமாயிருக்குந் தேவரீரது அழகியதிருவடிகளுக்கு நமஸ்காரம் எ - று. மிகயென் பதை யாண்டுங்கொண்டு கூட்டவும்.

(வி-ரை) இங்ஙனம் அத்தியந்த மாறுபட்ட சுபாவமுடைய பரமேசுவரனை அற்பபுத்தியுடையவர்களால் எவ்விதத்திலும் சொரு

பநிர்ணயஞ்செய்யமுடியாதென்றும்,அவர்கள் எவ்விதத்திலும் நமஸ் காரமே செய்யவேண்டுமென்றும் அநேக நமஸ்காரசத்தங்களைக் கூறுதலாற் பிரதிபாதித்தார். அங்ஙனமே " தூரத்தினு மதிதூரம்" அஃதின்டு சமீபத்திலும்" "அணுவினும் அணு மகத்தினு மகத்து" "நீ ஸ்திரீ நீ புருஷனு யிருக்கின்றாய் நீகுமாரன் அல்லது குமாரி" "நீ ஜரித்தவன் தண்டத்தால் பயப்படுகின்றாய் நீ பிறந்தவனுகின் றாய் எங்கு முகமுடையோன்" என்னுஞ் சுருதிகளும் பிரதிபாதிக் கின்றன. மிகுதியாகக் கூறுவது யெற்றிற்கு "இவையனைத்தும் யாதொரு இவ்வான்மாவோ" என்னுஞ்சுருதியால் சர்வரூபமா யிருக்கின்றவுனக்கு நமஸ்காரமென்பதுபொருள். ஆக்ஷேபம் சர்வ விகார அபின்னத்தன்மையால் விநாசத்தன்மை யுடையதாமே யென்றாசங்கித்து ; சர்வமும் மித்தையாக இருத்தலினுனும் உண் மையிற் பேதமின்மையால் எல்லாநாசத்திற்கும் ஆதாரமா யிருத் தலினுனும், சுருதிகளிலும் சாமானுதிகரணத்தால் குறிப்பித்தலினு னும், அத்துவிதியபிரம்மம் நாசத்தின் நாற்றத்தையேனும் உடைய தாகாதென்னு மபிப்பிராயத்தால் நமஸ்காரஞ்செய்கின்றவராய் அது இது வெனுமுழுதுளாய் போற்றி யென்றார். எ - று. ஒடு என்னு மிரண்டுமுடநிகழ்ச்சியில் வந்தன.

(அ-கை) இப்போது முற்கூறிய சர்வார்த்தங்களையுஞ் சுருக்கி நமஸ்காரஞ்செய்பவராய்த் துதியை யுபசம்மரிக்கின்றார்.

**போற்றி முப்புவனப் படைப்பினின் மிகுந்த ரசசொடு பொலிபவ போற்றி, போற்றியத் துடைப்பின் மிகுந்தமத் துடனே பொலியர வரவர போற்றி, போற்றிசத் துவத் தின் மிகுதியி லெவர்க்குஞ் சுகந்தர பொலியரி போற்றிப், போற்றிமுக் குணங்க ளொழிந்த முத்தியினிற் பொலிசிவ சிவசிவபோற்றி. (30)**

(இ-ள்) முப்புவனப் படைப்பினில் - மூன்று லகங்களையுஞ் சிருஷ்டிக்கு நிமித்தம், மிகுத்தரசசொடு பொலி - சத்துவ தமோ குணங்களைத் தானடக்கி அவற்றினும் மிகுந்த ரசோகுணவுபாதி யோடு விளங்கும், பவ - பிரம்மமூர்த்தியே, போற்றி போற்றி -

நமஸ்கார நமஸ்காரம், அத்துடைப்பின் - அவ்வுலகை அழிக்க, மிகுந்தமத்துடன் பொலி - சத்துவ ரசோகுணங்களைத்தானடக்கி அவற்றினுமிகுந்த தமோகுணவுபாதியோடும் விளங்கும், அரவுஅர- சர்ப்பாபரணத்தையுடையருத்திர மூர்த்திக்கு, போற்றி போற்றி- நமஸ்கார நமஸ்காரம், சத்துவத்தின் மிகுதியில் - ரசோதமோ குணங்களைத் தானடக்கி அவற்றினுமிகுந்த சத்துவகுண உபாதி யோடு, எவர்க்கும் - சகல ஜீவர்களுக்கும், சுகந்தர-சுககாரணமான ரக்ஷிப்பைச் செய்ய, பொலி - விளங்குகின்ற, அரி போற்றி போ ற்றி-விஷ்ணுமூர்த்திக்கு நமஸ்கார நமஸ்காரம், முக்குணங்களொ ழிந்த - சத்துவாதி மூன்று குணங்களற்ற, முத்தியினில்பொலி - மோட்சவடிவாய் விளங்கும், சிவபோற்றி சிவபோற்றி - சிவபெரு மானுக்கு நமஸ்காரம் சிவபெருமானுக்கு நமஸ்காரம் எ - று.

(வி-ரை) இங்ஙனஞ் சகுண நிர்க்குணங்களைத் துதித்து நிர்க்குணத்தையே "சிவம் அத்வைதம் சதுர்த்தம் என நினைக்கின் றனர்" என்னுஞ்சுருதியால் சிவ சிவபோற்றி யென்றார் எ - று.

(அ-கை) இங்ஙனம் பரமேசுவரர் துதிக்கத்தக்கத் தன்மையின ரன்றென்று கூறுபவராகவே துதித்துத் தனது தாழ்மை யின்மை யின் பரிகாரமாக "மதியெனது இந்த மொழிதெளியும்" என்று மூன்றாவது செய்யுளிலுபக்கிரமஞ் செய்ததனை ஈண்டு உபசம்மரிப் பவராய்த் துதிக்கின்றார்.

அல்ல னிறைந்து குறைந்த வளவான வெனதிவ்வுள மெங்கே, யெல்லை கடந்த குணங்களெனு மிரியா நினது செல்வ மெங்கே, சொல்லு மிதளிற் பயந்த வெனைத் துரி தம் புரிந்தே யன்பெனது, நல்ல வரத நினதடிக்கு நல்கு மொழிப்பூ வஞ்சலியே. (31)

(இ-ள்.) நல்லவரத - மேன்மையை யளிக்குவள்ளலே! அல் லல்நிறைந்து - துன்பமே நிறம்பி, குறைந்த அளவான - அற்ப பரிமாண (சொற்ப சிந்தன) முடைய, எனது இவ்வுள மெங்கே- என்னுடைய இந்த இழிந்தமனம் எவ்வளவு தாழ்ந்த நிலையி லிருக்கின்றது, எல்லைகடந்த - அளவற்ற, நினதுகுணங்களெனும்

இரியாச் செல்வம்எங்கே - தேவரீரது கல்லியாண குணங்களான கெடாத ஐசுவரியம் எவ்வளவு வுயர்ந்த நிலையி லிருக்கின்றது, சொல்லுமிதனில் - சொல்லாநின்ற இவ்வொவ்வாத்தார தம்மியத் தால், பயந்தஎனை - பரமேசுவரனது குணங்களைத் துதிக்கமுடியா தென்று பீதியையடைந்து மிகத்தாழ்ந்த என்னை, எனது அன்பு - தேவரீரை விஷயம் பண்ணும் என் அன்பானது, துரிதம் புரிந்து அங்ஙனம் பயமுறுவண்ணம் விரைவாகத் தூண்டி, மொழிப்பூஅஞ் சலி-இத்தோத்திரங்களான வாக்கியபுஷ்பங்களை, நினது அடிக்கு நல்கும் - தேவரீரது உபயதிருவடிகளிற் சமர்ப்பிக்கின்றது எ-று.

(வி-ரை) நல்ல வரதனே யென்று முடிவிற் கூறிய விளி மிகப் பொருத்த மானது. புஷ்பங்கள் மது மகரந்தங்களை வண்டு களுக்கு தூரத்திலிருந்துங் கொடுக்கின்றன; கந்தமாத்திரத்தால் ஏனையோருக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கின்றன. அங்ஙனமே இத்தோத்திர வடிவங்களான வாக்கியங்கள் பக்திரசமுடையவர்க ளுக்கு பரமேசுவர மகாத்துமிய வர்ணனமான இரசத்தைக் கொடுக் கின்றன; ஏனையோருக்கும் கேட்டல் மாத்திரத்தால் வஸ்துவின் சுபாவத்தை விளக்குதலினால் சுகவிசேஷத்தை யுண்டாக்குகின் றன வென்பார் மொழிப்பூ வென்றார். பக்தியின் தூண்டுதலாற் செய்யப்பட்ட தோத்திரத்துள்ள குற்றம் தனது சுதந்திரத்தாற் செய்த தாகாமையால் அதனைப் பொறுக்கவேண்டு மென்பார் பயந்தவென்னை யென்றார். பக்தியே அத்தியந்தங் கிட்டாப்பயனை யுங் கொடுக்குஞ் சக்தியையுடையதென்பார் துரிதம்புரிந்தே யென் றார். ஆகையால் கருணா மூர்த்தியான தேவரீர், உன்விஷயமான பக்தியே என்னைப் பிரேரணை செய்ததால் சர்வாபராதங்களையும் பொருட் படுத்தலாகாது என்பது இத்தோத்திர வாக்கியத்தின் விசேஷார்த்தம் எ-று.

(அ-கை) இந்நூலாசிரியர் துதியை யுபசம்மரிக்கையில் இங் ஙனஞ் சிவபெருமானது சொற்பமகிமையான குணங்களைக் கூறு தலினாலே யேன். துதியை முடித்தாரென யேனையோருக்குண் டாகும் ஆசங்கையை முழுதுங்கூறல் சாக்ஷாத் சாரஸதையாலு மாகா தென நீக்கிச்சாந்தியை யடைகின்றார்.

கருமா மலைபோ லுமையார் கலியே கடமா மதிலே சுரர்நீ டருவார், வரகோ டதுவே வரைகோ னிலனே வளமா வெழுதே டதெனு விவைசே, கரமே புரிசாரதைகா லமெலாங் கடிதே வரைவா ளெனலா யினுமே, பரமே சநினு துகுணங் களினோர் பகர்பா ரமடைந் திடலா யிலளே. (32)

(இ-ள்) பரமேச - பரமேசுவரனே! சாரதை - சாக்ஷாத்சரஸ்வதி, கருமாமலை போலும்மை - நீலகிரிபோன்றமையானது, ஆர் - பொருந்திய, கலியேகடமாம் - சமுத்திரத்தை மையடைத்த குடமாகவும், சுரர் நீள் தரு வார் வர கோடதுவே - தேவரது நீண்டகற்பகவிருக்ஷத்தின் நீண்டபெருமையுடைய ஒரு கொம்பையே, வரைகோல் - எழுதுங் கோலாகவும், நிலனே - பூமியையே, வளமா எழுது ஏடு அது எனு - நன்முக எழுதும் ஏடாகவும், இவை சேகரமேபுரி - இவைகளைச் சேகரித்துக் கொண்டு, கடிதே - அதிவிரைவாக, காலமெலாம் - தனது ஆயுள் உள்ளவரைக்கும், வரைவாளென லாயினும் - எழுதுகின்றவளானுலும், நினது குணங்களின் தேவரீரது எல்லைகடந்த கல்லியாண குணங்களில், பகர் ஓர் பாரம் - சொல்லாநின்ற ஒரு குணத்தின் முடிவையும், அடைந்திடல் ஆயிலள் - கண்டுவரைந்து முடிப்பவளாகாள் எ-று.

(வி-ரை) உனதென்பது நினதென்முய் நினுதென்முனது. சாதனங்களினீமுன ஏகாரங்கள் அவற்றின் குறைவற்ற மேன்மையை விளக்குகின்றன. எங்ஙனம் பரமேசுவரனது மஹிமையின் முடிவைக் காண அழியா வாயுளேயும், சர்வசிரேஷ்டமான சாதனங்களேயுமுடைய சர்வக்ஞையான சாக்ஷாத் சரஸ்வதியாலும் முடியாதோ அப்போது சாதன மின்மையும், அற்ப ஆயுளேயுமுடைய, அற்பக்ஞரான எம்போன்முரால் எங்ஙனங் கூறுவது முடியாது. அதனுல் இயன்றவரையுலுங் கூறுதலே துதியின் முடிவாமென்பார் "பாரம் அடைந்திடல் ஆயிலள்" என்முர்.

(அ-கை) இந்நூற்பெயரையும் இதனை ஆக்கியோன் பெயரைடம் அவர் சிவகணங்களுள் தலைமைவாய்ந்தவ ரென்பதையும்

ஸ்ரீகைலேயில் சிவசந்நிதியில் வீற்றிருந்த மகரிஷிகளுள் ஒருவர் கூறு கின்றதுபோலும்.

சருவகண வரிட்ட புட்ப தந்தனெனு மபிதானன், சுரவசுர முனிவரராற் றுதிசெயுஞ்சந் திரமவுலி, யொரு குணமின் றியவீசற் குறக்குணநன் மகிமனெனப், பெருகுசு வைப் பெருங் கதையாற் பெருந் துதியைப் புரிந்தன னே. (33)

(அ-கை) இந்நூலினைப் பூஜாஸ்தானத்தில் வைத்து நா டோறு நியமத்துடன் ஸ்ரீசிவபெருமானை இதனாற்றுதித்து வருபவ ருக்குண்டாகும் பலனைக் கூறுகின்றார்.

எவனு யினுமொரு துகளே யெதுமில விறைதூர்ச்சடி துதி யிதைநாளு, முவமா னமதறு பரமா மன்பொடு முளமே தூயவ னவில்வானே, லவனே கயிலையிலரனே ராகுவ னதுபோ லவனியி லதிகாயு, டவமா மகனொடு தனமோ வளவில தவிராதடைகுவன் புகழோடே. (34)

(இ-ள்) இந்நூலினை நியமத்தோடு படிப்பவருக்கே யன்றி படிக்கும்போது அன்புடன் சிவபெருமான் றிருவிளையாடற்களைக் கேட்போருக்கும் சர்வபலன் களுமுண்டாமென்றும் பிரமசரியாதி யாசிரமமும் பிராம்மணுதி வருணமும் வேண்டாமென்றுங் கூறு வார் "எவனுயினும்" என்றார். ஈண்டு ஜாதியொருமை, அனைவ ருக்கு மதிகாரமிருத்தலின் பால் வேற்றுமையுமின்று எ - று.

(அ-கை) இப்போது நூன் மகிமையையும் நுலா னுவலப் படும் பொருளின் ஒப்பற்ற உயர்வாந் தன்மையையும் உரைக்கின் றார்.

சீரு லாமுமை நாயகன் றனிற்பரதெய்வமுமிலேயேயா, மேரு லாஞ்சிவ மகிமையின் றுதியினு மேற்றமொன்றிலே யேயா, மோர கோரமந் திரந்தவிர்ந் துயர்தரு மந்திரமிலே யேயாம், வீரமாமுனி யருங்குரு தனிற்பர மெய்ப்பொரு ளிலேயேயாம். (35)

(இ-ள்) அகோரமந்திர மென்பது சிவோபாசனையைச் செய்யும் ஒருசார்பினர் ஜெபிக்குமந்திரமாம்; அது இரகசியமாதலின் குருமுகமாயுணரத்தக்கது. வீரமாமுனி யென்றது அஞ்ஞான அஞ்ஞான காரியங்களான சமுசாரத்தை ஞானமாகிய கட்கத்தால் சேதித்தலில் சமர்த்தரும் மகிமையுடைய மனன சீலருமென்பதாம்; அங்ஙனமானகுருவே அனைவரும் அடையத்தக்க அரிய தத்துவமாயிருக்கின்றார் என்பார் "குருதனிற் பரமெய்ப்பொருளில்லை" என்றார். மேலும் மத்தளவோசை தாளவரிசையான பொருளைக் குறித்துண்டாயினும் வழிப்போக்கருக்கு சத்தமாத்திரத்தால் மங்களத்தையும் போதிக்கின்றது. அங்ஙனமே "வீரமாமுனி யருங்குரு" யென்றது பொருள் வன்மையால் பொதுவான குருதத்துவத்தைப் போதிப்பதாயினும் சத்தவன்மையால் இந்நூலாசிரியர் சத்குருமூர்த்தியையு முணர்த்துகின்றது. ஆகலின் இதனால் தமது குருமூர்த்தியையும் நூலாசிரியர் சிந்தனை செய்கின்றார் என வறிக.

(அ-கை) இந்நூலை ஓது தலினானும் கேட்டலினானு முண்டாகும் பயன் சொற்பமுயல்பாலுண்டாயினு மது மிகப்பெரியதென்றுக் கூறுகின்றார்.

தானந் தீக்கை தவந்திருத் தீர்த்தமெய்ஞ்
ஞானயாகம தாதிய நற்றொழில்
பான மாமகி மைத்துதி பாடத்தோர்
நானன் றூற்கலை நண்ண விலாததே. (36)

(இ-ள்) மிகப்பெரியதான புண்ணியத்தில் விருப்பமுடையார் இதனை ஓதுதலென்னும் சொற்ப முயற்சியாகியதொழிலைவிட்டு அதிக கஷ்டமான யாகமுதலிய தொழில்களால் வருந்தவேண்டார் மென்பார் "நானன்றூற்கலைநண்ணவிலாததே" என்றார். நால் நல் நால்கலை என்பது பதச்சேதம். கலையென்பது, பதினாறி லொரு பங்கு. 33-வது செய்யுள்முதல் 36-வது வரையில்பொருள் வெளிப்படையாகலின் சர்வபதங்களுக்கும் பதார்த்தங்கள் வரைந்திலம். இச் செய்யுள் நான்கும் ஸ்தோத்திரத்திற்கு உட்பட்டனவேயாம்.

சர்வஞ்சுபம்.

(அ-கை) இந்நூலாசிரியர், சுவர்ணபாத்திரத்தை யொத்த தேவவாணி யிலிருந்த இந்த அரியசிவமகிமைத் தோத்திரத்தை மட்பாண்டத்தை யொத்த தமிழ்ப்பாஷையில் மொழிபெயர்த்த காரணத்தைத்தாமே கூறி அதனைத்தமது குரு மூர்த்திக்கு ஒப்புவித்து வாஞ்சிதார்த்தத்தை வேண்டுகின்றார்.

தமிழுல கறியவேண்டித் தமியனின் மகிமா வைத்தான்
றமிழ்மொழி யதனின் யாத்துத் தாரிதை யருப்பித்தேனு
லமிழ்தினு மினிய வாய வறிவுரு வுருவ மாய
வமிழ்தினை யருளும் வீர வாரிய வணிந்து காவாய். (37)

(இ-ள்) உலகத்தவரது நன்மையை வேண்டி யல்லது பொருள் புகழ்முதலியவற்றை விரும்பி மொழிபெயர்க்கப் படவில்லை யென்பார் "அறியவேண்டி" என்றார். இதனுலின் நூலாசிரியர் ஜீவர்க ளிடத்து மிக்ககருணையுடையவர் என்று விளங்குகின்றது.

(அ-கை) முதநூலிருக்க வழிநூல் சார்பு நூல் செய்யப்புகுவோர் தாமெடுத்துக்கொண்ட நூல் முட்டின்றி இனிது முடிதற்பொருட்டு தெய்வவணக்கத்தை நூலின் முதலிடைகடையிவற்றில் செய்யவேண்டியதாதலினுல் இந்நூலாசிரியரும் தாமெடுத்துக் கொண்ட விந்நூல் இடையூறின்றி இனிது முடிந்தமையால் இதன் ஈற்றில் தமதுவழிபடு கடவுள் தமது குருசம்ப்ரதாயத்தில் வழிபட்டு வருந்தெய்வம் தமதாசிரிய மரபைத்தழுவிய அடியவர் இவர்களின் ஆசீர்வாதவடிவமங்களத்தைக் கூறி முடிக்கின்றார்.

வாழியே வன்னி நீழல் வளர்தரும் வள்ளல் வாழி
வாழியே வள்ளிநாதன் வாழிநன் னெல்லை மாதும்
வாழியே கொற்ற நாதன் வன்னியிவ் வனத்தில் வாழும்
வாழியே குரவனோடு மாதவர் வாழி வாழி. (38)

---

சீரிலங்குஞ் சிவமகிமைத் துதிக்கினியச்
சிற்றுரையைச் செய்து மேலாம்
பாரிலங்குஞ் சிதம்பரஞா னாசிரியன்
பண்புடைய வடிசேர்த் தேனால்
நாரிலங்குஞ் சாரமதா யிதிலெடுத்து
ஞானமிலா னுரை செய்தானேல்
கௌரிபதி நாரணன்கோ தேவர்முனி
கௌதமரின் சாபத் தோனே (39)

(இ-ள்) முதனூலுரை யாசிரியராகிய ஸ்ரீ மதுசூதனசரஸ்வதி சுவாமிகள், தாமியற்றிய உரையின் சாரத்தைக்கொண்டு வேற்றோன் மற்றோர் வெற்றுரையையாற்றுவானேயானால் இங்ஙனம் சிவன், விஷ்ணு, பசு, தேவர், வேதியர் இவர்களின் துவேஷத்திற்கு அவன் பாத்திரனாகக் கடவனென்று கூறியிருக்கின்றமையின் அதனைத் தமிழிலாற்றப்புகுந்த யாமுமிங்ஙனங் கூறினேமென்றவாறு.

மாண்மையாமகி மாமலர் மண்டித
வாண்மை யேற்கரு ளம்பிகை நாதனை
வீண்மை யீர்ந்தும னவின்னி லோய்வற
நாண்மலர்க்கொடு நாடொறுந் தாழ்குவாம். (40)

பாயிரமுட்பட ஆக திருவிருத்தம்—52

---

ஸ்ரீ சிவமஹிம்ந ஸ்தோத்திர மூலமும்
சுபோதினி என்னுமுரையும்
முற்றியன.

---

PRINTED AT THE "ANANDA BODHINI" PRESS, MADRAS.

உ

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 11 | 21 | யுரிய | புரிய |
| 12 | 11 | மாமையா | மாயையா |
| 14 | 18 | காரனமா | காரணமா |
| ௸ | 20 | சத்துத்தி | சத்தத்தி |
| ௸ | 22 | குணாங்கா | குணாலங்கா |
| 26 | 14 | கூதுகின் | கூறுகின் |
| 51 | 17 | யோகத்து | யோதத்து |
| 52 | 7 | பாதி பாதி | பாதி |
| 54 | 20 | வங்காளக | வங்களாக |
| 56 | 12 | இப்பெத | இப்பேத |
| 61 | 21 | கரிகின் | கரிக்கின் |

உ

# புஸ்தக விளம்பரம்.

---

ரூ. அ.

ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளால் திருவாய் மலர்ந்தருளிய வேதாந்த சித்தாந்தசார சங்கிரகம், தமிழ் மொழிபெயர்ப்பு. ... ... 0 8

ஸ்ரீ கோயிலூர்க்கீத சுமாஞ்சலி, இதில் சர்வ தேவதைக ளுக்கும் சோடச அஷ்டோத்திர சதநாமார்ச்சனை யும், விநாயகர் கவசமும், சகலகலாவல்லி மாலையும், விநாயகராதி மூர்த்திகளுக்கும் வியாசராதி பெரி யோர்களுக்குந் தனித்தனி துதிகளும், நான்கு சீடருடன் கூடிய ஆதி சங்கராசாரிய சுவாமிகளின் ஆப்டோன் படத்தோடுங் கூடின சரித்திரமும், பஞ்சபுராணமும், சீடாசாரங் கவி ஐம்பதும், குரு சமாதி ஆலய பூஜா விதியும் ஆகிய இவைகளடங்கி யுள்ளன இதன் விலை ... ... ... 0 5

திருவண்ணமலை ஸ்ரீ ஈசானிய ஞான தேசிகர் சரித்திரம். இதில் ஸ்ரீ அண்ணமலையாரும் காட் டுப்புலியும் ஸ்ரீ தேசிகர் நிஷ்டை கூடி யிருக்கும் போது வரிப்புலி வடிவமாய் வந்து தேசிகர் சமீ பத்தில் காவலாய்ப் படுத்துக்கொண்டிருக்கும் வழ க்கம்போல் ஓர் படம் ஆர்ட் பேப்பரில் போடப் பட்டிருக்கிறது. மேலும் ஸ்ரீ அண்ணமலையார் தேசிகருக்குத் தரிசனங் கொடுத்தபோது அண்ண மலையார்மேல் தேசிகர் செய்த தோத்திரப் பாமா லையும் அச்சிடப்பட்டுள்ளது. இதன் விலை ... 0 4

புருஷார்த்தப் பிரகாணம். இதில் அந்தந்த வருண சிரமங்களும், அவரவர் தர்மானுஷ்டானங்களும், அவற்றாலெய்தும் பயன்களும், செய்யாவிட்டால் வருந் தோஷங்களும், வேதாந்தத்தின் விளக்கமும் சுருக்கி நிரூபிக்கப்பட்டுள்ளன. இதன் விலை ... 0 2

சமஸ்கிருத பண்டார்கர் தமிழுரை முதல் பாகமும், இரண்டாம் பாகமும் அச்சியில் இருக்கின்றன.

இப் புஸ்தகங்கள் கிடைக்குமிடம்:—

**ஈசானிய மடாலயம், திருவண்ணமலை.**